

குற்றாலம் அருள்மிகு திருக்குற்றாலநாத சுவாமி திருக்கோயிலின் சார்பில் கட்டப்பட்டுள்ள 8 அறைகள் கொண்ட தென்றல் பவனத்தினை மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு ஆர். எம். வீ. அவர்கள் திறந்து வைக்கிறார். திருநெல்வேலி மாவட்ட ஆட்சித் தலைவர் திரு பி.ஆர். பிந்துமாதவன், ஐ.ஏ.எஸ். திருக்கோயில் தக்கார் திரு கே. இராமையா, நிர்வாக அதிகாரி திரு டி. சிதம்பரம் ஆகியோர் உடன் உள்ளனர்.

முகப்பு

மகா கணபதி வரம்தரும்
காட்சி

# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை-600 034.

தொலைபேசி எண்: 479407

ஆசிரியர்: கவிஞர் டாக்டர்
த. அமிர்தலிங்கம், M.A., Ph.D.

மாலை 28 || திருவள்ளுவர் ஆண்டு 2017 அட்சய ஆண்டு புரட்டாசித் திங்கள் செப்டம்பர் 1986 விலை ரூ. 2-00 || மணி 9

**சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!**

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்

உயர்திரு
**ஆணையர் அவர்கள்**
**அறநிலைய ஆட்சித்துறை**
**சென்னை-600 034**

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

**திருக்கோயில் இதழின் ஆண்டுச் சந்தா ரூ 24.00 மட்டும்.**

புதிய சந்தாதாரர்கள் ஒரு ஆண்டிற்கு ரூ. 24/- எனக் கணக்கிட்டு எத்தனை ஆண்டுகளுக்குச் சந்தா கட்ட விரும்பினாலும் அத்தனை ஆண்டுகளுக்குப் பணம் அனுப்பிவைக்கலாம். அவர்கள் எப்பொழுது பணம் அனுப்பினாலும் பணம் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அந்தத் திங்களிலிருந்து அவர்கள் அனுப்பிய காலம் முடிய "திருக்கோயில்" இதழ் அனுப்பிவைக்கப்படும் என்பது தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும் பொழுது மணியார்டர் கூப்பனில் புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் (Pin code) எண்ணுடன் தெரிவிக்குமாறும் கேட்டுக் கொள்ளப் படுகின்றனர்.

## பொருளடக்கம்





# திருநெல்வேலி மாவட்டம்
# மேலச்செவல் குடமுழுக்கு விழாவில்
## மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர்
## திருமிகு ஆர். எம். வீ.
## ஆற்றிய சிறப்புரை



சிறப்புமிக்க இந்த மேலச்செவல் ஆலயக் குடமுழுக்கு விழாவிற்குத் தலைமை ஏற்றிருக்கின்ற முன்னாள் சபாநாயகர் பெரியவர் செல்லபாண்டியன் அவர்களே! என்னுடைய அன்பிற்கும் சிறந்த மரியாதைக்கும் உரிய இந்நாள் சட்டமன்றப் பேரவைத் தலைவர் பாண்டியன் அவர்களே! இங்கே இந்த ஆலயத் திருப்பணிக்குப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கும் பெரியோர்களே! தாய்மார்களே! நண்பர்களே!



துறைகள் தோறும் சாதனைகள் புரிந்து வரும்
மாண்புமிகு தமிழக முதல்வர் பொன்மனச் செம்மல்
டாக்டர் **எம். ஜி. ஆர்.** அவர்கள்

## எழுபத்துநான்கு ஆண்டுகளுக்குப் பிறகு நடக்கும் குடமுழுக்கு விழா.

முத்தமிழும்இணைந்துகொஞ்சிவிளையாடுகின்ற தென் பொதிகை பகுதியில் தாமிரபரணி நதியினுடைய கரையில் தொன்மை வாய்ந்த ஒரு ஆலயத்தினுடைய திருப்பணி விழாவை இங்கே நிறைவேற்றிக் குடமுழுக்கு விழாவிலே கலந்து கொள்ளுகின்ற ஒரு சிறந்த வாய்ப்பை உருவாக்கித் தந்த திருப்பணிக்குழு உறுப்பினர்களுக்கும், குறிப்பாக நம்முடைய அருமைச் சகோதரர் சட்டமன்றப் பேரவைத் தலைவர் பாண்டியன் அவர்களுக்கும் என்னுடைய நன்றியை முதலில் தெரிவித்துக் கொள்கிறேன்.

விழாத்தலைவர் பெரியவர் செல்லபாண்டியன் அவர்கள் எடுத்துச் சொன்னதைப் போல ஏறத்தாழ 74 ஆண்டுகளுக்குப்பிறகு இந்தக் குடமுழுக்கு விழா இன்றைக்கு நடைபெற்று இருக்கிறது. திருப்பணி நடைபெற்றுக்கொண்டு இருக்கிறது. காரணம் இன்னும் நடந்து முடியவில்லை.

இதற்குத் திட்டமிட்டு இருக்கிறவாறு இன்னும் சுமார் 60000 ரூபாய்அளவிலேவேலைகள் பாக்கி இருக்கின்றன. 1 லட்சம்ரூபாய்க்குத்தான் வேலைகள் முடிக்கப்பட்டு இருக்கிறது. அதிலே சுமார் 55,000 ரூபாயை - அருள்மிகு சுப்பிரமணியசுவாமி ஆலயத்திலிருந்து 25,000 ரூபாயும், பழநி ஆலயத்திலிருந்து 15,000 ரூபாயும், சங்கரன்கோயில் ஆலயத்திலிருந்து 10000 ரூபாயும், அரசு மானியமாக 5000 ரூபாயும் ஆகமொத்தம் 55000 ரூபாய் இதற்கு வழங்கப்பட்டிருக்கிறது.

45000 ரூபாய்தான் பொது மக்களாலே திரட்டித் இந்தத் திருப்பணிக்கு செலவிடப்பட்டு இருக்கிறது. இன்னும் சுமார் 62000 ரூபாய்க்குத் திருப்பணிகள் நிறைவேற்றப்படவேண்டும். அவர்கள் என்னிடத்திலேவாக்குறுதி அளித்திருக்கிறார்கள். அவர்களே வசூலித்து இந்தத் திருப்பணியை நிறைவேற்றுவதாகத் தெரிவித்திருக்கிறார்கள். பெரியவர்கள்எல்லாம் கொடுத்த வாக்குறுதியைத் தவறவிடமாட்டார்கள் என்பதிலே நமக்கு மிகுந்த நம்பிக்கை இருக்கிறது. ஆகவே அவர்கள் செய்து முடிப்பார்கள் என்பதிலும் நமக்கு நம்பிக்கை இருக்கிறது.

## ஓடாத தேரை ஓட வைக்கவேண்டும்.

ஏனென்றால் நம்முடைய சட்டப் பேரவைத் தலைவர் அன்பிற்குரிய அருமைச் சகோதரர் பாண்டியன் அவர்கள், இங்கே வேறொரு திருப்பணியை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இது ஏதோ திட்டமிட்டு இந்தக் காரியம் நடந்திருப்பதாகத்தான் நான் எண்ணுகிறேன். ஏனென்றால் நம்முடைய சபாநாயகர் என்னி



9-9-86 இல் மணிவிழா நிறைவினைக் காணும் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு ஆர்.எம்.வீ. அவர்களைப் ''பல்லாண்டு வாழ்க'' என வாழ்த்துகிறோம்.

டத்திலே பேசுகிறபொழுது இந்த மேலச்செவல் கிராமத்தில் உள்ள இந்த ஆலயத்திற்குத் திருப் பணி நடத்தப்படவேண்டும் அல்லது திருப்பணி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது அதற்கு நிதியுதவி செய்ய வேண்டும் என்று அவர்கள் கேட்கவே இல்லை. அவர் இந்தத் தேரைத் தான் திருப்பணி செய்து எப்படியாவது ஓட வைக்க வேண்டும் என்பதாகத் தெரிவித்தார் கள்.

நானும் அவர்கள் தெரிவித்த பொழுது இந்தத் தேரை நேரிலே பார்க்காமல், தேர் என் றால் ஓடிக் கொண்டிருக்கிற தேர், கொஞ்சம் பழுது பட்டுப்போயிருக்கும். ஆகவே, சில ரிப் பேர் வேலைகளைப் பார்த்தால் போதும். சில ஆயிரம் ரூபாய்கள் செலவழித்தாலே அந்தத் திருப்பணி முடிந்து விடும்; அதனால் என்ன செய்து விடுவோம் என்று நான் அவர்களிடத் திலே வாக்களித்தேன். அதற்குப் பிறகு அவர் கள் ஓயாமல் அதை வற்புறுத்திக் கொண்டே இருந்தார்கள். நம்முடைய அதிகாரிகளிடத்திலே சொல்லி அதற்கொரு மதிப்பீடு தயார் செய் யுங்கள் என்று நான் சொன்னதற்குப் பிறகு இன்றைக்கு இரண்டு லட்சத்தி ஏழாயிரம் ரூபாய்க்கு மதிப்பீடு தயாரிக்கப்பட்டிருக்கிறது.

நான் இரண்டு லட்சத்தி ஏழாயிரம் ரூபாய்க்கு மதிப்பீடு தயார் செய்யப்பட்டிருக் கிறது என்று சொன்ன பொழுது, சரி ஒரு மிகப் பெரிய தேர்போல் இருக்கிறது. ஆகவே அதிலே மிக அதிகமான செலவு வரும், அதற்கு வேண் டிய ஏற்பாடுகளைச் செய்யலாம் என்று தெரி வித்தேன். ஆனால் இப்பொழுது நான் நேரிலே இந்தத் தேரைப் பார்த்ததற்குப் பிறகு, இந்த இரண்டு லட்சத்தி ஏழாயிரம் ரூபாய்க்குள்ளே இது நிற்குமா என்பது எனக்குச் சந்தேகம்.

ஆகவே, தான் இந்த ஊர்க்காரர்கள் திட்டமிட்டுச் செய்தார்களா? அல்லது நம்மு டைய சபாநாயகர் இதிலே திட்டமிட்டுப் பணி யாற்றினாரா? எனக்குத் தெரியவில்லை. இந்தத் தேர்த்திருப்பணியையும் ஆலயத் திருப்பணியை யும் ஒன்றாக இணைத்துப்போய் கேட்டால் ஏதாவது மொத்தமாக ஒரு அளவிற்குத்தானே நாம் நிதிவாங்க முடியும். ஆகவே, ஒரு திருப் பணிதானே இதிலே நிறைவேறும். ஆகவே, நீங்கள் தேர்த்திருப்பணியை நடக்கச் செய் யுங்கள். அதற்காக அரசினிடத்திலே-அமைச்சரி டத்திலே கேளுங்கள் என்று நம்முடைய சுப்பிர மணிய முதலியார் போன்றவர்கள் சபாநாயகர் அவர்களுக்கு ஆலோசனை வழங்கினார்களா என்னவென்று எனக்குத் தெரியவில்லை.

இல்லை, நம்முடைய சபாநாயகர் பாண்டி யன் அவர்களே, சரி அந்தத் திருப்பணி தனி யாக நடக்கட்டும்; அது யாரைப் பிடித்து அப் பணிக்கு எப்படிக் கேட்க வேண்டுமோ அப்படிக் கேட்டுக் கொள்ளட்டும், ஆகவே அந்தக் காரிய மும் நடக்கட்டும், நம்முடைய வழியிலே இந்தத் தேர்த்திருப்பணியும் நடக்கட்டும் என்று அவரே திட்டமிட்டாரோ? எனக்குத் தெரியவில்லை. ஆனால் மிகுந்த திறமையோடு இன்றைக்குத் திட்டமிட்டு இரண்டு திருப்பணிகளை இங்கே வெற்றிகரமாக ஒன்றை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்கள். இன்னொன்றை நிறை வேற்ற இருக்கிறார்கள்.

## அந்தக்காலத்திலே எப்படிக் கட்டினார்கள்?

ஆனால் எப்படியோ இங்கே திட்டமிட்டு திட்டமிட்டு என்று நான் சொல்லுவதன் மூலம் ஏதோ தவறான காரியத்திற்குத் திட்டமிட்டி ருக்கிறார்கள் என்று எண்ணவேண்டாம். நாட் டிலே நல்ல காரியத்திற்காகத் திட்டமிட்டிருக் கிறார்கள். இப்படிப்பட்ட திட்டங்கள் வளர வேண்டும், வாழவேண்டும் என்றும் நான் அவர் களை வாழ்த்துகிறேன். இதற்குக் காரணமாக யாரிருந்தாலும் அவர்கள் எல்லாம் நம்முடைய அன்பிற்கும் பாரட்டிற்கும் உரியவர்கள்.

ஆகவே அப்படிப்பட்ட இரண்டு திருப்பணி களாக இதைப் பிரித்து இன்றைக்கு இந்த ஆல யத்தினுடைய திருப்பணி சிறப்பாக நிறைவேறிக் கொண்டிருக்கிறது. திருத்தேர் திருப்பணி நிறை வேற இருக்கிறது. நம்முடைய பெரியவர் செல்லபாண்டியன் அவர்கள் அதை நினைக்கிற பொழுதே பயந்துபோய் சொன்னார்கள். இது எப்படி இழுக்கப்போகிறார்களோ தெரியவில் லையே என்று.

ஏனென்றால் இந்தக் காலத்திலே அப்படித் தான் ஆகிவிட்டது. ஆலயப்பணிகளானாலும் சரி, தேர்த்திருப்பணிகள் ஆனாலும் சரி, ஆன் மீகப் பணிகள் எல்லாம் நாம் எப்பொழுதோ எங்கேயோ செய்த தவறின் விளைவாக நம் முடைய அஜாக்கிரதையின் காரணமாக இன் னும் சொல்லப்போனால் பொறுப்பற்ற உணர் வின் காரணமாக சமுதாயத்திலே எந்தப்பணி கள் நிலையாக நிச்சயமாக நடைபெறவேண் டுமோ அவைகள் இப்படித் தள்ளிப் போடப் பட்டு மக்களாலே புறக்கணிக்கப்படுகிற சூழ் நிலைக்கும் ஆளாகி இருக்கிறது.

பெரியவர்கள் செல்லபாண்டியன் அவர் கள் என்னை மன்னித்துக் கொள்ள வேண்டும். இந்தச் சூழ்நிலைக்கு நாம் அனைவரும் பொறுப் பேற்றுக் கொள்ள வேண்டும். அவர்கள் ஒரு காரணத்தைச் சொன்னார்கள். இந்த ஆலயத் தை இந்தக் கிராமத்திலே அந்தக் காலத் திலே எப்படிக் கட்டினார்கள்?

## தஞ்சைநெல்லை மாவட்டங்களில் ஆலயங்களின் நிலை

இங்கே கூட அந்தக் குடமுழுக்கு விழா நடைபெற்றுக் கொண்டிருந்தபொழுது நம்மு டைய பெரியவர் சுப்பிரமணிய முதலியார் அவர்களும், சுப்பையா முதலியார் அவர்களும் இதிலே எவ்வளவு சங்கடப்பட்டு இந்தக்காரி யங்களை எல்லாம் செய்து முடித்திருக்கிறோம் என்று சில வார்த்தைகளிலே குறிப்பிட்டார்கள். நான் அப்பொழுதுதான் அவர்கள் இடத்திலே கேட்டேன்.



அருள்மிகு நெல்லையப்பர் காந்திமதி அம்பாள் ஆலயத்தில் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் அம்பாளுக்குத் தங்கக் கவசம் சாற்றுகிறார்.

இன்றைக்கு நாம் மிகப் பெரிய சமுதாய மாக வளர்ந்திருக்கிறோம். பொருளாதாரத்தில் வளர்ந்திருக்கிறோம். விஞ்ஞானத்திலே வளர்ந் திருக்கிறோம். அறிவியலிலே வளர்ந்திருக்கி றோம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம், இன்றைக்கு நம்மாலே இந்தத் திருக்கோயி லுக்குத் திருப்பணிகளையே செய்ய முடிய வில்லை. ஆனால் அன்றைக்கு இந்தக் கிராமத் தினுடைய மக்கள் தொகை எவ்வளவு இருந் திருக்கும்?

நம்முடைய பெரியவர் செல்லபாண்டியன் அவர்கள் சொன்னதைப் போல சிலநிலச்சுவான் தார்கள் அல்லது வசதி படைத்தவர்களே இருந் திருக்கட்டும். அவர்கள் மாத்திரமே இந்தக் காரியத்தை நினைத்து வெற்றிகரமாக முடித் திருக்க முடியாது. அன்றைக்கு இருந்த மக்கள் அனைவரும் ஒத்துழைத்திருந்தால் அன்றி இந்த ஆலயத்தை எழுப்பியிருக்க முடியாது.

ஆகவே, அன்றைக்கு மிக குறைவாக மக்கள் தொகை இருந்த ஒரு கிராமத்தில் இவ் வளவு பெரிய ஆலயத்தை எழுப்பியிருக்கிறார் கள். இன்றைக்கு நம்மாலே இந்த ஆலயங்களை நிர்வகிக்கவே முடியவில்லை. நம்முடைய சபா நாயகர் அவர்கள் தெரிவித்தார்கள்; இந்த தொகுதியில் தாமிரபரணி கரை ஓரத்திலே மிகப் பெரிய ஆலயங்கள் நிறைய இருக்கின்றன என்று தெரிவித்தார்கள்.

நான் இன்னொன்றையும் சொல்லுகிறேன்; நிறைய ஆலயங்கள் தமிழகத்திலே தஞ்சை மாவட்டத்திலும் நெல்லை மாவட்டத்திலும் இருக்கின்றன. ஆனால் அந்த ஆலயங்கள் எல் லாம் வறண்டுபோய் இருக்கிற சூழ்நிலையும் தஞ்சையிலேயும் தான், நெல்லையிலேயும் தான். ஆனால் மிக செழிப்பான நஞ்சை நிலங்கள் நீர்ப்பாசனங்கள், வளமான நீர்ப்பகுதிகள் இந்த இரண்டு மாவட்டங்களில்தான் இருக்கின்றது.

வளமான நீர்ப்பகுதிகளும் நஞ்சை நிலங் களும் கொஞ்சிவிளையாடுகின்ற இந்த இரண்டு மாவட்டங்களில் நாம் பாதுகாக்க வேண்டிய ஆலயங்களைப் பாதுகாக்காமல் புறக்கணித் திருக்கிறோம். அக்கறையற்றுப் புறக்கணித் திருக்கிறோம். ஆகவே, எங்களுக்கு மிகப்

பெரிய தொல்லை இந்த ஆலய நிர்வாகத்திலே இந்த தஞ்சை மாவட்டத்திலும், நெல்லை மாவட்டத்திலும் தான்.

பல ஆயிரக்கணக்கான ஆலயங்கள் ஒரு வேளை பூசை கூட நடக்க முடியாமல் இருப்பது தஞ்சை மாவட்டத்திலேதான். அதைப்போல நெல்லை மாவட்டத்திலேயும் பல ஆலயங்கள். ஆனால் பூசை நடக்க முடியாத ஆலயங்கள் என்கிற பட்டியலை விட இங்கே திருப்பணி செய்ய முடியாமல் இருக்கின்ற ஆலயங்களின் பட்டியல் அதிகம்.

## புரட்சித் தலைவர் கொண்டு வந்த திட்டம்

நம்முடைய சபாநாயகர் அவர்கள் கொஞ்சம் கணக்கைக் குறைத்துச் சொல்லிவிட்டார்கள். ஒருவேளை அதிகக் கணக்கைச் சொன்னால் இனிமேல் தர வேண்டிய பணத்தைத் தராமல் இருந்து விடுவோமோ என்று எண்ணியோ, என்னவோ தெரியவில்லை.

அவர் இந்தத் தொகுதியிலே மாத்திரம் இந்த ஆலயங்களுக்காக ஏறத்தாழ ஒரு லட்சத்தி நாற்பத்தையாயிரம் ரூபாய் வாங்கியிருக்கிறார். அவர் வாங்கவில்லை. அதனாலே அவருக்கு நினைவிலே வரவில்லையோ என்னவோ தெரியவில்லை.

இந்த ஆலயத்திற்கு 55000 ரூபாய் தந்திருக்கிறோம். இந்த நெல்லை மாவட்டததிலே திருப்பணி செய்யமுடியாதகோயில்கள், அதற்கு உதவுவதற்காகப்புரட்சித் தலைவருடைய ஆட்சியில் பழநிஆலயத்தினுடைய நிதியிலே இருந்து ஒரு கோடி ரூபாய் வைப்பு நிதியாக வைத்து அதிலே இருந்து வருகிற வட்டித் தொகையிலே இருந்து இந்தக் கிராமக் கோயில்கள், அவர்கள் கட்ட முடியாமல்-செலவு செய்ய முடியாமல்-திருப்பணி நடத்தமுடியாமல் இருக்கிற கோயில்களுக்கு அதிகபட்சம் 10,000 ரூபாய் திருப்பணி செலவிற்காக தரலாம் என்று நிதியை முதலீடாக வைத்துத் திட்டத்தை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறோம்.

அதிலே ஏறத்தாழ ஒரு 16 லட்ச ரூபாயை தமிழகத்திலே ஒரு 150 கோயில்களுக்குப் பிரித்துக் கொடுத்தோம். அதிலே நம்முடைய சபாநாயகர் தொகுதிக்கு மாத்திரம் 9 கோயில்களுக்குக் கொடுத்திருக்கிறோம். 90000 ரூபாய் கொடுத்திருக்கிறோம். அதை அவர்களிடத்திலே சொல்ல வில்லையோ என்னவோ தெரியவில்லை.

இங்கே நம்முடைய ஒன்றிய செயலாளர் இருக்கிறார். மிகுந்த கெட்டிக்காரர்கள், எப்படியோ நம்முடைய அதிகாரிகளிடத்திலே கணக்கைக் கொடுத்து. வாயுள்ள பிள்ளைதான் பிழைக்கும் என்பதைப் போல, ஒன்பது ஆலயங்களுக்கு 90000 ரூபாய் வழங்கியிருக்கிறோம். இன்னும் ஆறு அரிசன் கோயில்களுக்கு நிதி தேவை என்று அவர்கள் இங்கே தெரிவித்திருக்கிறார்கள். நிச்சயமாக அந்த ஆலயங்களுக்கு நிதி வழங்கப்படும் என்பதையும் நான் அவர்களுக்கு இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்கிறேன்.

## மிகப் பெரிய பேரியக்கமாக வளர்ந்திருக்கிறது

நான் இதைச் சொல்வதற்குக் காரணம் இவ்வளவு பெரிய ஆலயங்களை அன்றைக்கு நம்முடைய முன்னோர்கள் எழுப்பினார்கள்; பாதுகாத்தார்கள், மிகப்பெரிய தேர்களை நிர்மாணித்தார்கள், அதை வடம் பிடித்து இழுத்தார்கள். அது ஏன் இன்றைக்கு காப்பாற்ற முடியாமல் போய்விட்டது என்பதை அருள் கூர்ந்து நாம் எண்ணிப் பார்க்கவேண்டும்.

அதற்கு அவர்கள் ஒரு காரணத்தைச் சொன்னார்கள். முன்னாலே செல்வந்தர்கள் இருந்தார்கள். நிலச்சுவான்தாரர்கள் இருந்தார்கள், அவர்களே நினைத்து ஆலயங்களுடைய விழாக்களை நடத்தினார்கள், திருப்பணிகளை நிறைவேற்றினார்கள் என்று.

அது மாத்திரம் அல்ல, மக்களிடத்திலேயே அந்த உணர்வு இருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக எந்தக் காரணத்தினாலோ எதனாலோ அதை நாம் மாற்றி விட்டோம். அக்கறையற்ற தன்மையை வளர்த்துவிட்டோம்.

இங்கே அவர்களே பார்த்து வியந்தார்கள், சிறுவர்கள் எல்லாம் இளைஞர்கள் எல்லாம் முண்டியடித்துக் கொண்டு இங்கே சந்நிதிக்கு வர முயன்றதையும், திருநீறு வாங்குவதற்காகப் போட்டி போட்டுக் கொண்டு வந்ததையும் அவர்கள் பார்த்து மிகப் பெரிய உணர்வோடு, அந்த முதிர்ந்த அனுபவத்திலே மகிழ்ந்தார்கள்.

இந்த உணர்வை ஒரு காலத்திலே நாம் சுட்டெரித்து விட்டோம். பொசுக்கிவிட்டோம். அதனுடைய விளைவுதான் எதையும் அலட்சியப்படுத்துவது, எதையும் இழிவு படுத்துவது, எதையும் கேவலப் படுத்துவது என்கிற உணர்வு வளர்ந்து, துச்சமாக மதிக்கின்ற அந்தச் சூழ்நிலைக்கு இளைஞர் சமுதாயத்தை-இன்னும் ஓரளவுக்கு விவரம் தெரிந்தவர்களை எல்லாம் அக்கறையற்றவர்களாக மாற்றிவிட்டோம்.

தெரிந்தோ, தெரியாமலோ அல்லது எந்தக் காரணத்திற்காகவோ இந்த தவற்றைச் செய்த குற்றத்திற்காக நாம் அனைவரும் பொறுப்பேற்றுக் கொண்டாக வேண்டும் என்பதை மாத்திரம் இந்த நேரத்திலே பெரியவர்களுக்கு என்னுடைய சிரம் தாழ்ந்து இந்தக் கருத்தைத்தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இன்றைக்கு அது மாறியிருக்கிறது. இன்றைக்கு ஆலய வழிபாடு என்பதும், ஆன்மீக இயக்கம் என்பதும் மிகப் பெரிய பேரியக்கமாக வளர்ந்திருக்கிறது. நான் போகிற இடங்களில் எல்லாம் ''கோயில் கட்டித் தாருங்கள்''

''கோயில் திருப்பணி செய்யுங்கள்'' ''இதற்கு குடமுழுக்கு விழா நடத்துங்கள்'' - இதைக் கேட்காத கிராமங்களே இன்றைக்கு இல்லை.

அதை எப்படிக் கட்டித் தருவது என்பது தான் நமக்கிருக்கிற பிரச்சினை. இந்த ஒரு ஆலயத்திற்குத் திருப்பணி நிறைவேற்றுவதற்கே அவர்கள் எத்தனை முறை சென்னைக்கு வந்திருக்கிறார்கள். எத்தனை பேரைப் பிடித்திருக்கிறார்கள்.ஒரு பக்கம் நம்முடைய சபாநாயகர்: இன்னொரு பக்கம் பழநிவேல் ராஜன்.

நான் அவர்களைப் பார்த்த உடனே எனக்கே ஆச்சரியம். காரணம் பி.டி.ஆர். பழநிவேல்ராஜன் திடீரென்று வருகிறார். அவர் எங்கள் புதுக்கோட்டை பகுதியிலேயே அறந்தாங்கி பகுதியில் இருக்கிற ஒரு ஆலயத் திருப்பணிக்

பெரியவர் செல்லபாண்டியன் அதைத் தான் இங்கே குறிப்பிட்டார்கள். ஆகவே இன்றைக்கு அந்தக் காலம் மாறி, சக்கரம் எப்படிச் சுழல்கிறதோ அதைப்போல இன்றைக்கு இந்தக் காலம் மாறிவந்திருக்கின்றது. அந்த உணர்வு வளர்ந்திருக்கின்றது. அதுவும் தமிழக முதல்வராக மாண்புமிகு டாக்டர் புரட்சித் தலைவர் அவர்கள் பொறுப்பேற்றுக் கொண்டதற்குப் பிறகு இந்த உணர்வு ஒரு மிகப் பெரிய இயக்கமாக வளர்ந்திருக்கிறது.

## மூன்று சிறந்த திட்டங்கள்

அதனாலேதான் நாங்கள் பொறுப்பேற்றுக் கொள்ளுகிற நேரத்தில் தமிழகத்திலே இருக்கும் ஆலயங்கள் அனைத்திலும் சேர்த்து வைத்திருந்த தொகை சுமார் மூன்றரைக் கோடி



அமெரிக்காவிலிருந்து அண்மையில் மீட்டுக் கொண்டுவரப்பட்ட சிவபுரம் நடராசர் திருவுருவச் சிலைகளை மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் பார்வையிடுகிறார்.

காக அவர் வந்து என்னிடத்திலே பேசுகிறார். என்ன இதற்காக நீங்கள் வந்து பேசுகிறீர்களே என்று கேட்டால், ''அந்த ஆலயத்தினோடு எங்களுக்கு நீண்ட காலமாக நெருங்கிய தொடர்பு உண்டு'' அதுவும் மாணிக்கவாசகர் வரலாற்றோடு தொடர்புள்ள அப்படிப்பட்ட ஒரு ஆலயம் அங்கே இருக்கிறது. அதற்காகவும் அவர்கள் வந்து பேசுவார்கள்.

திடீரென்று ஒருநாள் பார்த்தால் இங்கே நம்முடைய மேலச்செவல் - இந்த ஆலயத்திற்காக வந்து பேசினார்கள். இப்படி தமிழகத்தினுடைய பல இடங்களிலே தொடர்புள்ள பெருமக்கள் இந்த திருப்பணிக்கு முயற்சியெடுத்து எவ்வளவு முயன்றிருக்கிறார்கள் என்பது இதிலே ஈடுபட்டவர்களுக்குத் தெரியும். எங்களைப் போன்றவர்களுக்குத் தெரியும்.

ரூபாய்தான். ஆனால் இன்றைக்கு 7 கோடி ரூபாய் வைப்பு நிதியாக வைத்து மூன்று திட்டங்களை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறோம்.

பூஜையே செய்ய முடியாமல் இருக்கின்ற வறுமை நிலைமையில் வாடிக் கொண்டிருக்கின்ற ஆலயங்களுக்கு ஒருவேளை பூசையாவது நடத்த வேண்டும் என்பதற்கு 5 கோடி ரூபாய்; ஒரு கோடி ரூபாய் இந்த கிராமக் கோயில்களின் திருப்பணிகளுக்கு வழங்குவதற்கு. ஒரு கோடி ரூபாய் ஆலயங்களிலே பணியாற்றுகின்ற அர்ச்சகர்கள், அலுவலர்கள் அவர்களுடைய நலனைப் பாதுகாப்பதற்கு.

அப்படி அந்த ஒரு கோடி ரூபாய் வைப்பு நிதியின் வட்டியிலிருந்துதான் இன்றைக்கு 18 லட்ச ரூபாயை வழங்கினோம். ஆலயத் திருப்

பணிக்காக வருகிற மாதத்தினுடைய முதல் வாரத்திலே 60 லட்ச ரூபாயை சுமார் 1300 ஆலயங்களிலே ஒருவேளை பூசை நடத்துவதற், காக வழங்க இருக்கிறோம். ஐந்து கோடி ரூபாய் வைப்பு நிதியிலே இருந்து கிடைக்கின்ற அந்த வட்டியில்.

இவ்வளவு எடுத்து வைத்ததற்குப் பிறகும் இன்றைக்குத் தமிழக ஆலயங்கள்அனைத்திலும் சேமித்து வைத்திருக்கிற தொகை சுமார் 27 கோடி ரூபாய். இவ்வளவுக்குப் பிறகும், இந்த ஆலயங்களுக்கு இருக்கின்ற நிலங்களின் குத் தகைப் பாக்கி மாத்திரம் ஏறத்தாழ 35 கோடி ரூபாய் இருக்கிறது.

## ஒருவரிடம் பதினைந்து ஏக்கர் நிலம்

நான் இந்தக் குத்தகைப் பாக்கி என்று சொல்லுகிற நேரத்தில், இந்த ஆலயங்களினு டைய நிலத்தை வைத்திருக்கின்ற பெருமக்கள் தயவு செய்து விளைந்தால் கொடுக்கவேண்டிய குத்தகையைக்கொடுங்கள். விளையவில்லை யானால் ''விளையவில்லை அடுத்த ஆண்டு தருகிறேன்'' என்றாவது சொல்லுங்கள்.

நான் இந்தச் செய்தியை சொல்லுகிற பொழுது இங்கே இருக்கின்ற பெரியவர்களு டைய ஒத்துழைப்பை எல்லாம் இந்த ஆலயத் திற்காக ஒரு விசயத்திலே நான் நாடுகிறேன். பெரியவர் செல்லபாண்டியன் அவர்களிடத்தி லேயும் அதைத் தெரிவித்தேன்.

இந்த ஆலயத்திற்கு நகைகள் மாத்திரம் 83ஆம் ஆண்டின் மதிப்பீட்டின்படி சுமார் 75,000 ரூபாய்க்கு இருப்பதாகத் தெரிகிறது. அது இன்றைக்கு என்ன மதிப்பு என்று எனக்குத் தெரியவில்லை. இதற்கு நஞ்சை 1 ஏக்கர் 94 சென்ட் இருக்கிறது. புஞ்சை 15 ஏக்கர் 96 சென்ட் இருக்கிறது.

ஆனால் இந்த நஞ்சை 1 ஏக்கர் 94 சென்ட் தான் இவர்களிடத்திலே இருக்கிறது. இந்த புஞ்சை 15.96 ஏக்கர் ஒருவரிடத்திலே இருக் கிறது. நான் நாகரிகம் கருதி அந்தப் பெயரை இங்கே சொல்லவில்லை. காரணம் இந்த கிரா மத்திலே இருக்கிற பெரியவர்களுக்கெல்லாம் அந்தப் பெயர் தெரியும்.

## சிவன் சொத்து குலம்நாசம்

இந்த 15.96 ஏக்கர் புஞ்சையை ஒரு குடும் பத்தினர் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் குத்தகை தருவதில்லை. வேறு எந்த விதமான பணமும் கட்டுவது இல்லை. தங்களு டைய சொந்த நிலமாகக் கருதிக் கொண்டிருக் றார்கள். அதை இவ்வளவு காலமாக இந்த ஆலய நிர்வாகத்தினர் அப்படியே விட்டு விட் டார்கள். கவனிக்காமல் விட்டு விட்டார்கள். இன்றைக்கு நம்முடைய அதிகாரிகளாக-நல்ல இளைஞர்களை எல்லாம் இன்றைக்குத் தேர்ந் தெடுத்திருக்கிறோம். உதவி ஆணையராகச் சட்டப்படிப்பு படித்த அருமை நண்பர் பக்கிரி சாமி என்பவர்கள் இப்பொழுது புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்று, இங்கே நிர்வாகம் செய்து வருகிறார். தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்தவர்.

அவர் வந்ததற்குப் பிறகுதான் இதைக் கண்டுபிடித்து, இதை ஏன் அவர்கள் வைத்திருக் கிறார்கள் என்று விசாரித்து, நோட்டீசு கொடுத்து, அந்த நிலத்தைக் கையகப்படுத்து வதற்காக நடவடிக்கையிலே ஈடுபட்டிருக்கிறார் கள்.

அருள்கூர்ந்து அந்த நிலத்தை வைத்துக் கொண்டிருக்கிறவர்களை நான் அன்போடு உங்களுடைய காலைத் தொட்டுக் கேட்டுக் கொள்கிறேன், அந்த நிலத்தை ஆலயத்தினிடத் திலே ஒப்படைத்து விடுங்கள். நீங்கள் விவசாயி யாக இருந்தால் விவசாயம் செய்யுங்கள். அதற் குள்ள குத்தகையைத்தாருங்கள்.

இல்லை இல்லை, நீண்ட காலமாக நாங்கள் தான் வைத்துக் கொண்டிருக்கிறோம். அனு பவித்துக் கொண்டிருக்கிறோம். ஒரு காசு கூடத் தரமாட்டோம் என்று நீங்கள் சொல்லுவீர் களேயானால், ''சிவன் சொத்து குலம் நாசம்'' என்று பழமொழி இருக்கிறது. அதை மாத்திரம் நான் சொல்லிவைக்கிறேன்.

இது என்ன அமைச்சர் சாபம் தருகிறாரா என்று நீங்கள் எண்ணாதீர்கள். சாபம்இட்டால் பலிக்குமா என்று கூட கேட்கின்ற அந்த அறிவு வளர்ச்சி நமக்கு ஏற்பட்டிருக்கிறது. பலிக் கும். ஆனால் எப்பொழுது பலிக்கும் என்று உனக்கும் தெரியாது, எனக்கும் தெரியாது. அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும் என்பது அது வெறும் பழமொழி யல்ல; உயிரோட்டமுள்ள இந்த நாட்டினுடைய நடவடிக்கை.

## திட்டமிடாமல் எத்தனையோ காரியம் நடக்கிறது.

நீ தெய்வம் என்று பெயரை வைத்துக் கொண்டாலும் சரி, இயற்கை என்றாலும் சரி, ஏதோ ஒரு சக்தி இந்த உலகத்தை நடத் திக் கொண்டு இருக்கிறது. எனக்குத் தெரிந்து சில காரியங்கள் நடக்கிறது. எனக்குத் தெரியா மல் பல காரியங்கள்நடக்கிறது. எனக்குத் திட்ட மிட்டவாறு சில காரியங்கள் நடக்கின்றது. நான் திட்டமிடாமல் எத்தனையோ காரியங் கள் நடக்கிறது.

நேற்று முன்தினம் நீங்கள் செய்தியைப் படித்திருப்பீர்கள். சென்னை நகரத்தில் நேதாஜி சுபாஸ்சந்திரபோஸினுடைய அந்தத் தேசிய வீரர்கள் படை வரிசையிலே தன்னையும் ஒரு படை வீரராக்கிப் பணியாற்றியவர், எங்களுக் கெல்லாம் மிக நெருங்கிய தோழர், பிள்ளை என்று அவரை நாங்கள் அழைப்போம்.

அவர் கேரளத்துக்காரர், அருமை நண்பர் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்களிடத்

திலே ஏறத்தாழ 40 ஆண்டுக் காலம் நிர்வாகி யாகப் பணியாற்றியவர். படித்தவர். அமைதி யானவர்.

அவர் தெருவிலே நடந்து மாலையில் சோழா ஓட்டலுக்கு எதிரே போய் கொண்டி ருக்கிறார். எவனோ வந்த பொறுப்பற்றவன் ஒருவன், ஆட்டோ ரிக்ஷாவிலே வந்து மோதி னான். அந்த இடத்திலேயே விழுந்தார். மருத் துவமனைக்குக் கொண்டுபோய் மரணமாகி விட்டார்.

நான் இதைச் சொல்லுவதற்குக் காரணம், சாவு எப்படி வருகிறது? நாமா திட்டமிடுகி றோம். படுக்கப்போகிறவர்கள் எல்லாம் காலை யிலே எழுந்து வரப்போகிறோம் என்ற நம்பிக் கையில்தானே படுக்கப் போகிறோம். அப்படி எழுந்து வரமுடியும் என்று நம்பிக் கொண்டிருக் கிற நமக்கு இந்த இறைவனிடத்திலே மாத்திரம் நம்பிக்கை வராது என்று சொன்னால் என்ன பொருள்?

ஆகவே எங்கே தண்டனை வருகிறது, எப் பொழுது தண்டனை வருகிறது. அது நம்மு டைய கண்ணிற்குத் தெரிந்து வருகிறதா? சொல்லிவிட்டு வருகிறதா? சொல்லிவிட்டு வராது. எத்தனையோ கதைகள் தெரியும். அவைகளை எல்லாம் சொல்லி அந்தக் குடும்பத்தினரைப் புண்படுத்த நான் விரும்ப வில்லை.

ஒரு ஆலயத்திலே தொடர்ந்து அந்த ஆலயச் சொத்துக்களை அனுபவித்துக் கொண்டு வரு கின்ற ஒரு குடும்பம் வாழவே இல்லை. அழிந்து கொண்டே இருக்கிறது. வெளியிலே பார்த்தால் அவர்கள் இலட்சாதிபதிகளாகத் தெரிகிறார்கள். ஆனால் அந்தக் குடும்பத்திலே வரிசையாக எப் படியோ ஒரு விபத்திலே சாகிறார்கள், ஒரு நோயிலே சாகிறார்கள், சிறுவயதிலே சாகிறார் கள். அந்த மரணத்திற்கு உற்றகாலம் வரும் வரை அங்கே யாரும் இருப்பதே இல்லை. அப்படி வருகிறது சாவு, கொள்ளையாக வருகின்றது மரணம்.

இதெல்லாம் என்ன காரணம்? எங்கே யென்று தேடிக் கண்டுபிடித்தால் எங்கேயோ, யாருக்கோ தீமை செய்திருக்கிறோம். யாருக்கோ தீங்கிழைத்திருக்கிறோம். யாரு டைய குடும்பத்தையோ கெடுத்திருக்கிறோம். எங்கேயோ நம்முடைய ஒழுக்கத்திலேஇருந்து பிறழ்ந்திருக்கிறோம்.

எல்லாவற்றுக்கும் மேலாக இந்த இறை வனை உள்ளத்திலே இருந்து நீக்கியிருக்கிறோம். காரணம் நீங்கள் இறையுணர்வை உள்ளத்தில் வைத்தால் தானே தீய உணர்வுகள் வெளியில் போகும்.

## குடமுழுக்கு விழா பன்னிரண்டு ஆண்டு களுக்கு ஒருமுறை ஏன்?

எதற்கு ஆலயத்திற்குக் குடமுழுக்கு விழாக் கள் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடத்துகிறார்கள். என்ன முட்டாள்தனமாகவா வைத்தார்கள்? இந்தப் பன்னிரண்டு ஆண்டுகள் என்பது ஏதோ திடீரென்று சொன்ன ஒரு கணக்கு அல்ல. இந்த உலகத்தினுடைய சுழற்சியில், விஞ்ஞானக் கண்ணோட்டத்தில் இந்த பிரபஞ்சத்திலே எப்படிக் கிரகங்கள் சஞ்சரிக்கின்றன என்பதை வைத்துக் கணக் கிட்ட ஆண்டுகள் 12 என்பது.

ஆகவே, தான் 12 ஆண்டுகளுக்கொரு முறை இந்த ஆலயங்கள் புனருத்தாரணம் செய்யப்படவேண்டும். குடமுழுக்கு விழாக்கள் நடத்தப்பட வேண்டும், மருந்து சாத்தப்பட வேண்டும். மூல விக்கிரகங்கள் புனிதப்படுத்தப் படவேண்டும் என்ற முறையை நம்முடைய முன்னோர்கள் வைத்திருக்கிறார்கள். இப்படி வைத்த முறையை அவர்களும் நமக்குச் சொல் லித்தரவில்லை. நாமும் தெரிந்துகொள்ள முயல வில்லை. வந்த கஷ்டமே அதுதான்.

நான் இங்கே கூட கேட்டேன். மேலே இங்கே வைத்திருக்கும் அந்தக் கும்பம் கான் கிரீட்டினால்தான் இங்கே வைத்திருக்கிறார்கள். நான் அநேகமாக முதன் முதலாக இங்கேதான் இவ்வளவு பெரிய கோயிலிலே கான்கிரீட்டி னால் வைத்த கும்பத்தை இங்கே பார்த்தேன். காரணம் கலசங்கள் எல்லாம் செம்பு கலந்த அந்த உலோகத்திலேதான் செய்வது வழக்கம்.

சாதாரணமாக சின்ன ஊர்களிலே-கட்டு கின்ற சாதாரணமான கோயில்களிலே எப்படி வேண்டுமானாலும் கட்டுவார்கள். அவர்களுக்கு அந்தக் கோயில் கட்டுகின்ற இலக்கணமும் தெரி யாது, நெறிமுறைகளும் தெரியாது. ஏதோ வணங்குவதற்கு ஒரு ஆலயம் வேண்டுமே என்று மரத்தடியிலே சிலைகளை வைத்து வணங்கு வதைப் போல் அதற்கென்று ஒரு இடம் கட்டு வதைப் போல, கட்டிக் கொண்டு இருக்கிறார் கள்.

## கோபுரக் கலசங்கள் ஏன்?

ஆனால் பழமையான கோயில்களில் அந்தக் கலசங்கள் எப்படி அமைக்கப்பட்டிருக்கின்றன என்பது எனக்குத் தெரியாது. காரணம் இந்த விசேடங்களை எல்லாம் நடத்துகின்ற, அந்த சாஸ்திரங்களை எல்லாம் கற்றுக் கொண்டிருக் கின்ற அர்ச்சகர்கள் அந்தப் பட்டாச்சாரியார் கள், இவர்களாவது இந்த விவரங்களை

---

***ஆலய மேம்பாட்டுத் திட்டத்தின்கீழ், 12-8-86 அன்று திருவையாற்றில் நடந்த விழாவில் 1300 ஆலயங்களுக்கு, ஒரு வேளை பூசை நிதி யாகத் தலா ரூ.5000 மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் வழங்கி, ஆலயப் பணியாளர்களுக்குச் சம்பள நிலுவையாக இருந்தரூபாய் ஒன்பது லட்சமும் வழங்கினார். அவற்றின் விவரம் வரும் திருக்கோயில் இதழ் களில் இடம் பெறும்.***

---

எல்லாம் மிகத் தெளிவாகத் தெரிந்து சொல்ல வேண்டும். அல்லது சிற்பிகளாவது அதைத் தெரிந்து சொல்லவேண்டும்.

எதற்காகக் கலசம் வைத்திருக்கிறார்கள்? 13 நிலைகள் இருந்தால் 13 கலசம் அதற்கு. 3 நிலைகள் இருந்தால் 3 கலசம் அதற்கு. 5 நிலைகள் இருந்தால் 5 கலசம் அதற்கு. எல்லாவற்றிற்கும் காரணம் இருக்கிறது.

இந்த ஆலய வழிபாடு என்பது அறிவற்ற செயல், அறிவுக்கும் இதற்கும் தொடர்பு இல்லை, என்று எண்ணிக் கொண்டிருக்கிறோமே நம்முடைய ஆலய வழிபாட்டு முறைகள் அனைத்தும் அறிவின் அடிப்படையிலே, ஆராய்ச்சியின் அடிப்படையிலேதான் உருவாக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொன்றுக்கும் அறிவுத் தொடர்பு இருக்கிறது.

மேலே நீங்கள் வைக்கிற அந்தக் கலசங்கள் எல்லாம் வெறும் கூடுகள் அல்ல. இங்கே இருக்கிற சாஸ்திரம் படித்தவர்கள் அதைச் சொல்ல வேண்டும். அதற்குள்ளே வெறும் கலசங்களை வைப்பது அல்ல. அதற்குள்ளே தானிய வகைகள் எல்லாம் கொட்டி வைக்கிறார்கள். எதற்கு என்றால், இடிவிழுவதிலே இருந்து காப்பாற்றுவதற்காக அந்த கலசங்கள் அப்படிப் பாதுகாப்பாக வைக்கப்படுகின்றன.

இவ்வளவு உயர்ந்த ஆலயங்களுக்கு-எந்த ஆலயத்திற்காவது இடி தாங்கி வைத்திருக்கிறோமா? இன்றைக்குப் புதிய கட்டிடங்கள் கட்டுகிறவர்கள் இடிதாங்கி வைக்கிறார்களே! 200 அடி 250 அடி உயரத்திற்குக் கோபுரத்தை எழுப்பியிருக்கிறோமே நாம். எந்த கோபுரத்திற்கு இடிதாங்கி இருக்கிறது. எப்படி அது தாங்கிக் கொண்டிருக்கிறது. இந்த கலசங்களுக்குள்ளேதான் அந்த இடியைத் தாங்குகின்ற விஞ்ஞானத்தை - மின்சாரத்தை நம்முடைய தமிழ் மக்கள் அந்தக் காலத்திலேயே கண்டு பிடித்திருக்கிறார்கள்.

இங்கே இருக்கிற கோபுரம் அவ்வளவு உயரமாக இல்லை. ஆகவே, ஆபத்து இதற்கு வராது. இடி விழுவதற்கு உயரமும் தேவை இல்லை. எங்கேயும் இடி விழ முடியும். உயரமான இடத்திற்குச் சீக்கிரமாக இடி விழும் என்பதைத் தவிர இடி எங்கேயும் விழும். ஆகவே தான் இந்த முறைகளை எல்லாம் கூட நமக்கு முறையாகச் சொல்லித்தர வில்லை.

இதெல்லாம் மூடநம்பிக்கை என்று அலட்சியப்படுத்தினோம். காரணம் முறையாக நமக்குத் தெரிவிக்காததாலே தெரியாதவர்கள் மூட நம்பிக்கை என்று நாம் சொன்னோம். இல்லை இல்லை இது மூட நம்பிக்கை அல்ல, அது நல்ல நம்பிக்கையின் அடிப்படையிலே எழுந்தவை தான் என்பதையும் நமக்கு எடுத்துச் சொல்ல வில்லை.

## சாதியை ஒழிப்பதற்குத்தான் ஆலயங்கள்

அதைப்போலத்தான் தேரோட்டுவதும். ஐயா அவர்கள் சொன்னார்கள். அந்த காலத்தில் சாதி வித்தியாசம் இல்லாமல் எல்லோருமே இந்தஆலயத்திலே வணங்குவார்கள். ஆனால் அப்பொழுதும் ஆதிதிராவிட மக்கள் அவர்களாகவே கொஞ்சம் ஒதுங்கியிருப்பார்கள். சுதந்திரம் பெற்றதற்குப் பிறகு இன்றைக்கு எல்லோரும் இந்த ஆலயத்திற்குள்ளே வருகிறோம்.

நான் வேதனையோடு சொல்லிக்கொள்வேன், இன்றைக்குக்கூட ஆதி திராவிட மக்களைத் தடுக்க வேண்டும் என்கிற உணர்வு படைத்த பிற்போக்கு வாதிகளும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். புரட்சிக் கவிஞர் பாடினாரே ''சாதி இருக்கின்ற தென்பவனும் இருக்கின்றானே'' என்று. அதைப்போல தீண்டாமை வேண்டும் என்று சொல்லுகின்ற மூடர்களும் இன்றைக்கும் இருக்கிறார்கள். சில இடங்களிலே அந்தஸ்தோடும் கூட இருக்கிறார்கள். அவைகளை எல்லாம் தகர்த்து ஒழிப்பதற்குத் தான் ஆலயங்கள்.

இவை எல்லாவற்றையும் விட, இவர்களாவது ஆலயத்திற்குள்ளே சில இடங்களுக்கு சிலர் வரலாம், வரக்கூடாது என்று தடுக்கிறார்கள். ஆனால் எந்த இடத்திலாவது தேர்இழுப்பதிலே எங்கேயாவது தடுத்திருக்கிறார்களா? நீங்கள் ஆலயத்திற்குள்ளே எனக்குப் பரிவட்டம் முன்னாலே கட்டு, பின்னாலேகட்டு அல்லது இந்த ஜாதிக்காரர்களுக்கு மண்டகப்படி அல்லது அந்த ஜாதிக்காரர்களுக்கு மண்டகப்படி, இவர்கள்தான் உள்ளே வரலாம், இவர்கள்தான் இதைச் செய்யலாம் என்று இந்த ஆலயவழிபாட்டிலாவது சச்சரவுகள் இன்றைக்கும் இருந்து கொண்டு இருக்கிறது.

ஆனால் தேர் இழுப்பதிலே இவன் பிராமணன், இவர் முதலியார், இவர் பிள்ளை, இவர் பறையர், எங்கேயாவது பார்த்திருக்கிறீர்களா? இந்தத் தேர் வடம் பிடித்து இழுப்பது என்பது சமுதாய ஒற்றுமைக்காக. இந்த ஜாதி பேதத்தை ஒழிப்பதற்காக.

இன்னும் அதிலே ஒரு ஐதிகத்தை வைத்திருக்கிறார்கள். அது யாருக்குமே தெரியாது. சொல்லிக்கொள்ளவில்லை அவர்கள். தேர்வடம் பிடித்து இழுத்ததற்குப் பிறகு வீட்டிற்குப் போனால் குளிக்கக் கூடாது என்பது இன்றைக்கும் ஐதிகம்.

சுகாதாரமுறைப்படி வெளியே போய் விட்டு வந்தால் குளிக்க வேண்டும் என்று சொல்கின்ற இந்த விஞ்ஞானி இருக்கின்றானே! இவனே நாலு நாள் அந்த ஈர டவலை வைத்து மேலே துவட்டிக் கொள்கிறவன் தான், இன்றைக்கும் விஞ்ஞானத்தைச் சொல்லித் தருகிறான். ஆனால் விடிந்து எழுந்தால் 4 முறை குளிக்கவேண்டும் என்ற பழக்கத்தை உடையவர்களே நாம் தான். ஆகவே விஞ்ஞானக் கருத்தல்ல, குளிக்க வேண்டும் என்பது. அந்த உடல் நலத்திற்காக குளிக்க வேண்டும். நம்முடைய முன்னோர்கள் ஆலயத்தை எப்படி வைத்தார்கள்? ஏன் ஆற்

றோரங்களிலே ஆலயங்கள் வந்தது? மலை முகடுகளிலே ஆலயங்கள் வந்தது? ஆற்றோரங்களிலே விடியற்காலையில் சூரியன் வருவதற்கு முன்னாலே போய் இறைவனைத் தொழ நேரமில்லை என்று சொன்னோமே! டாக்டர் சொல்கிறாரே! காலையில் எழுந்து நீ 4 மைல் நட. எங்கேயிருந்து நேரம் வருகிறது? நடக்கவில்லையானால் நீ படுத்துவிடுவாய். படுப்பதோடு அப்படியே முடிந்து விடும் உன்னுடைய கதை என்று சொல்லுகிறார்களே.

இன்றைக்கு டாக்டர் சொல்கிறபோது பயந்து நடுங்கி அதைக் கேட்கிறோமே! 5 மணிக்கு எழுந்து நடக்கிறாயே, அதற்கென்று ஆப்டவுசர், அதற்கென்று ஷூ; அதற்கென்று சாக்ஸ். இதிலே அலங்காரங்கள். ஏன் ஆலயத்தைச் சுற்றவேண்டுமென்று மலைகளிலே வைத்தார்கள். இன்றைக்கும் நீ ஏறி இறங்கு.

குன்றுகள் இருக்கும் இடத்திலே குன்றுகள் மேல் ஆலயம். அறுகள் இருக்கிற இடத்திலே ஆற்றங்கரையிலே ஆலயம், கடல் இருக்கிற இடத்திலே கடற்கரையிலே ஆலயம், ஏன்? கடற்காற்று வாங்குவதற்குப் போ, இந்த மனிதனுக்குச் சொன்னால் அவன் கேட்க மாட்டான், திமிர் பிடித்தவன், மடையன். அறிவு என்று இவனுக்குப் பெயரே தவிர, அறிவற்ற ஜென்மம் இந்த மனித ஜென்மம்தான். அதற்காகத்தான் சொன்னார்கள்.

## இவ்வளவு பெரியதேர்கள் ஏன் தெரியுமா?

அப்படித்தான் தேரை வடம் பிடித்தார்கள். நாளை காலை நம்முடைய காந்திமதி அம்பாள் ஆலயத்தினுடைய தேர் வடம் பிடிக்கப்பட போகிறதே! யாராவது என்ன ஜாதி என்று கேட்பதுண்டா? கேட்பார்களா? எவனாவது பக்கத்திலே நிற்பவன் இந்த ஜாதிக்காரன் என்று பார்க்கிறானா? தேரை வடம் பிடிக்கும் போது இவர்கள் அனைவரும் ஒன்று. ஆண்டவன் முன்னாலே அனைவரும் சமம், அதற்கு ஏற்படுத்தினார்கள்.

சரி இந்த ஊரெல்லாம் ஒற்றுமையாக ஒரு நிகழ்ச்சிக்காவது வரட்டும், வந்து ஒற்றுமைப்பட்டார்கள். ஊரே திரண்டு தேர் வடம் பிடிக்க வேண்டும், அதற்காக வைத்தார்கள். அந்த மரபுகளை எல்லாம் இழந்து, நெறிகளை எல்லாம் துறந்து, என்னசார் தேர்வடம் பிடிக்கிறது என்றுகேட்கிறோம். காலையிலே டாக்டர் சொல்கிறாரே! எக்ஸர்ஸைஸ் செய். ஓடுகிற சைக்கிள் மாதிரி அங்கேயே நின்றுகொண்டு பெடலைச் சுற்று. இன்றைக்கு அவைகள் எல்லாம் நாகரிகத்தின் பெயராலே, வைத்தியங்கள் பெயராலே உன்மீது திணிக்கப்படுகிறது.

இவ்வளவு பெரிய தேர்களை ஏன் செய்தார்கள். என்ன முட்டாள்களா? என்னய்யா இந்த சாமிக்கு ஒரு சின்னத் தேர் இருந்தால் போதாதா? இவ்வளவு பெரிய தேர் இருந்தால் தானே இந்த ஊர்க்காரர்கள் அனைவரும் வந்து வடம் பிடிப்பார்கள். இல்லையானால் பத்துப் பேர் போதுமே, பதினைந்து பேர் போதுமே.

இந்த மேலச்செவல் கிராமத்திலே இருக்கிற அத்துணைப் பிரிவினரும் அத்துணை மக்களும் கலந்து கொள்ள வேண்டுமானால் ஒரு வேலை வேண்டும். ஒரு நெறி வேண்டும், அதற்குத் தேர். அதற்காக இவ்வளவு பெரிய தேனரச் சிற்பக் கலையோடு படைத்தார்கள்.

பக்கத்திலே வீர நாராயணபுரம் என்று நான் கருதுகிறேன். விஜயநாராயணபுரம்; நான் அங்கே போய் பார்த்தேன். உலகப் புகழ்பெற்ற தொன்மையான ஒரு ஆலயம். அங்கே அந்தத் தேரை எவ்வளவு அற்புதமாகப் படைத்திருக்கிறார்கள். கம்பன் இராமாயணத்திலே பாடியிருக்கிற அத்தனைக்காட்சிகளும் அதிலே சிற்பமாக அதிலே வடிக்கப்பட்டு இருக்கின்றன.

அங்கே மக்கள் அந்த ஆலயத்தைக் கூட பணம் இல்லாமல் பாதுகாப்பதற்குத் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். தேரைக் கண்ணைப் போலக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறார்கள். அதுவும் இதே நெல்லை மாவட்டத்திலேதான்.

ஆகவே, இன்றைக்குத் தேர்கள் எல்லாம் ஓடாமல் நின்று கொண்டிருக்கின்றன. தேய்ந்து கொண்டிருக்கின்றன. இந்தச் சமுதாயம் தேய்ந்து கொண்டிருக்கிறது. இந்தக் கிராமமும் தேய்ந்து கொண்டிருக்கிறது.

ஆலயங்கள் ,ஆலயத்தைச் சுற்றி அங்கே குளம் குட்டைகள், அங்கே இருக்கிற மற்றமற்ற அமைப்புகள் எல்லாம் இருந்தால் அதைப்பார்த்தாலே குளிர்ச்சியாக இருக்கும். அந்த கிராமமமே கண்ணிறைந்த குளிர்ச்சிக்குரியதாக இருக்கும்.

முறைகள் இங்கே சொல்லுகிறார்கள். கால்வாய் இங்கே திறந்து விடவில்லை, திறந்து விடவில்லை, என்பது மிகப் பெரிய பிரச்சினை. இங்கே ஒரு வழக்கம் இருக்கிறது. இந்தக் கால்வாய் திறந்து விட்டால் சாரல் தானாகவே வந்துவிடும் என்று. அது எப்படி ஒன்றுக்கொன்று தொடர்பு இருக்கிறது என்று கருதுகிறீர்கள்.

ஓரிடத்திலே தேக்கியிருக்கிற தண்ணீரை ஊரெல்லாம் ஓட விட்டால் இந்த இயற்கைச் சூழ்நிலையையே அது மாற்றுகிறது. தண்ணீரை ஒரு இடத்திலே தேக்கி வைக்கிற பொழுது அங்கேதான் இருக்கிறது, குளிர்ச்சி. அதைக்கால்வாயிலே திறந்து விட்டால் எல்லா இடத்திற்கும் பரவலாக வருகிறது. இந்த தட்பவெப்ப நிலையையே மாற்றுகிறது என்று தானே பொருள்.

இல்லையானால் எப்படி மழை பொழிகிறது. எப்படி தண்ணீர் வருகிறது? எப்படி மீண்டும் மழை பெய்கிறது, இவ்வளவு நதியும் போய் கடலில்தானே கலக்கிறது. கடல் எப்படிப் பிடிக்கிறது? ஆகவே இப்படிப் பட்ட உணர்வுகள் எல்லாம் இந்த ஆன்மீக உணர்வில் ஆலய வழிபாட்டில் இறை உணர்வில் நம்முடைய முன்னோர்கள் அறிவார்ந்த அடிப்படையிலே படைத்திருக்கிறார்கள்.

அதை எங்கேயோ தவற விட்டு விட்டோம். எங்கேயோ இன்றைக்கு இழந்து விட்டதை மீண்டும் கண்டு பிடிக்க துடித்துக்கொண்டிருக்கிறோம். அது இன்றைக்குக் கண்ணுக்குத்

தெரிந்து விட்டது கலங்கரை விளக்கத்தைப் போல. காரணம் அழிக்க முடியாத இயக்கம் இந்த ஆன்மீக இயக்கம்.

## நம்மை நாமே திருத்திக்கொள்கிறோம்

இறை உணர்வு என்பதை உலகத்திலே எந்த சக்தியாலும் அழிக்க முடியாது. காரணம் அது நிலைத்து நிற்கக் கூடியது. நாமெல்லாம் அழிந்து கொண்டே இருக்கிறவர்கள். அழிந்து கொண்டிருக்கிறவன் நிலையானவன் என்று எண்ணிக் கொண்டிருக்கிறான். நிலையானதை அழிவு அல்லது இல்லாதது என்று எண்ணுகிறோம்.

ஆகவே, சமுதாயத்திற்காக ஆலயங்களைப் பாதுகாக்கிற உணர்வை நாம் காப்பாற்றியாக வேண்டும். வளர்த்தாக வேண்டும். அதிலே இன்றைக்கு இருக்கிற பெரியவர்கள் எல்லாம் மனமுவந்து அந்தப் பணிக்கு ஒரு குறிப்பிட்ட காலத்தையாவது ஒதுக்கிக் கொள்ள வேண்டும். இளைஞர்களுக்கு அந்த உணர்வை வளர்த்தாக வேண்டும்.

இல்லையானால் இளைஞர்கள் எப்படி ஆவார்களோ என்று பயமாக இருக்கிறது. எனக்கு அச்சமாக இருக்கிறது. இன்னும் இந்த நாடு அந்த அளவிற்குக் கெட்டுப் போய்விடவில்லை. உயர்ந்த நாடு, பணக்கார நாடு என்று சொல்லப்படுகின்ற அமெரிக்கா போன்ற நாடுகள் இன்றைக்கு நிம்மதி யில்லாமல் சீரழிந்து கொண்டிருக்கின்றன.

அவர்கள் தான் உலகத்திற்கே பெயர்தெரியாத, அடிப்படை தெரியாத நோயையே பரப்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, அந்த அளவிற்கு நிம்மதியற்று தவிக்கிறார்கள். பணம் இருந்தால் மாத்திரம் போதாது. அறிவு வளர்ந்தால் மாத்திரம் போதாது. மனிதர்களாக வாழ வேண்டும். அப்படிப்பட்ட பண்பை, தாய்மார்கள் தான் இந்த நாட்டிலே காப்பாற்றிக் கொண்டு வருகிறார்கள். ஆலயங்களையும் அவர்கள்தான் காப்பாற்றிக் கொண்டு வருகிறார்கள்.

## இந்தக் கிராமத்தில் பிறந்தவர் பெரியவர் செல்லபாண்டியன்

ஆகவே, இந்த வகையிலேதான் இவ்வளவு ஒரு சாதாரண ஒரு சிற்றூரில் இவ்வளவு சிறந்த தொன்மையான மிகப் பெரிய ஆலயத்தை முன்னோர்கள் கட்டி வைத்திருக்கிறார்கள். அதிலே மிகப் பெரிய சிறப்பு இந்தத் தொகுதிக்கே இரண்டு சபாநாயகர்கள் வந்திருக்கிறார்கள்.

அதிலே இந்தக் கிராமத்திலே பிறந்தவர் நம்முடைய முன்னாள் சபாநாயகர். இந்தத் தொகுதியுடன் தொடர்பு கொண்டவர் நம்முடைய இந்நாள் சபாநாயகர். ஆகவே, இந்தத் தொகுதியும் இந்தப் பகுதியுமே அப்படி ஒரு சிறப்பிற்குரியதாக நீண்ட காலமாக விளங்கி வந்திருக்கிறது. ஆகவேதான் இத்தனை ஆண்டு கழித்தாவது இந்த ஆலயத்திற்கு இப்படி ஒரு சிறப்பு வந்திருக்கிறது.

இந்தச் சிறப்பு என்பது ஆலயத்திற்கோ இறைவனுக்கோ அல்ல. நம்மை நாமே திருத்திக் கொள்கிறோம் என்பதுதான் பொருள். அதைத் தான் நம்முடைய சபாநாயகர் சொன்னார். திருப்பணி என்பது தான் சமுதாயப்பணி, மக்கட்பணி. மக்கள் தொண்டே மகேசன் தொண்டு.

ஆகவே, மகேசனுக்குச் செய்கிற தொண்டு என்பது மக்களுக்காகச் செய்கிற பணிதான். அந்தப்பணி வளரட்டும் வாழட்டும் பெருகட்டும் என்று அவர்கள் வாழ்த்தினார்கள். அந்த உணர்வோடு இந்த தொன்மையான ஆலயத்தில் இந்தத் திருப்பணியை நிறைவேற்ற முன்வந்த சான்றோர்கள் அனைவரையும் நான் என்னுடைய இரு கரம் கூப்பி வணங்குகிறேன். வாழ்த்துகிறேன், பாராட்டுகிறேன் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

## இந்தியாவிற்கே பெருமை சேர்க்கும் ஆலயம்

இந்த நேரத்தில் ஒரு கருத்தை நான் தெரிவிக்க விரும்புகிறேன். இந்த மாவட்டத்திலே மிகச் சிறந்த புகழ் பெற்ற சுற்றுலாத் தலங்கள் எல்லாம் இருக்கின்றன. அதிலே ஒன்று கிருஷ்ணாபுரம் என்று அழைக்கப்படுகின்ற ஒரு மிகச் சிறந்த புகழ்பெற்ற சிற்பக் கலை மிக்க ஆலயம் ஒன்று இங்கே இருக்கிறது. அது உலகத்தவர் வந்து பார்த்து வியந்து பாராட்டுகின்ற ஒரு ஆலயம்.

அந்த ஆலயம் இப்பொழுது அருள்மிகு நெல்லையப்பர் ஆலயத்தினுடைய துணை ஆலயமாக இருக்கிறது. நெல்லையப்பர் ஆலயத்திற்கே நிலத்தை வைத்துக் கொண்டு குத்தகை தராமல் இருக்கிற காரணத்தினாலே அது நிதி ஆதாரத்திலே மிக கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற ஆலயம். ஆகவே, அதற்கொரு திருப்பணியினைத் தொடங்கி சில ஆண்டுகள் ஆகிவிட்டன. அப்படியே முடங்கிக் கிடக்கிறது.

அந்த ஆலயத்தை திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணியசுவாமி ஆலயத்தினுடைய துணை ஆலயமாக அதை மாற்றுவதற்கான நடவடிக்கையை நம்முடைய துணை ஆணையர் அவர்கள் உடனடியாக எடுத்துக் கொள்ள வேண்டும். காரணம் அது நெல்லைக்கு மாத்திரம் புகழ் தரும் ஆலயம் அல்ல. தமிழகத் திற்கு-இந்திய நாட்டிற்கே புகழ்தரும் ஆலயம். அந்த ஆலயத்தினுடைய திருப்பணி வேலைகள் விரைவிலே தொடங்கி நிறைவேற்றப் பட்டாக வேண்டும். அதற்கான முயற்சியையும் நம்முடைய துணை ஆணையர் அவர்கள் மேற்கொண்டாக வேண்டும்.

அந்த ஆலயத்தை அருள்மிகுசுப்பிரமணிய சுவாமி ஆலயத்தினுடைய துணை ஆலயமாக உடனடியாக ஆணை பிறப்பிப்பதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படவேண்டும் என்பதை நான் இங்கே தெரிவித்து, இந்தவாய்ப்பிற்கு நன்றி கூறி, விடைபெற்றுக் கொள்ளுகிறேன் வணக்கம்.




இராம. வீரப்பன் அறநிலையத் துறைக்கு அமைச்சரான பிறகு, ஆங்காங்கே காக்க வேண்டிய பண்புகளைக் காத்து வருவதைப் பார்க்கிறேன்.

ஓர் அறநிலையம் சம்பந்தமாகச் சில தகவல்களை விசாரிக்க, இந்த வாரம் அமைச்சர் வீரப்பன் அவர்களைச் சந்தித்தேன். சந்தித்த இடம் ஒரு பொது விழாதான்.

எந்த அமைச்சரின் வீட்டுக்கும் இதுவரை நான் போனதுமில்லை; நேரத்தை எடுத்துக் கொண்டதுமில்லை.

என்னைவிட ஒரு வயது மூத்தவரான வீரப்பன், இருபத்தைந்து வருடங்களுக்கு முன் பார்த்த மாதிரியே இருக்கிறார்.

சில மனிதர்களுக்கு வயது ஆவதே தெரியாமல், உருவம் எப்போதும் ஒரே மாதிரி இருக்கும். அது ஒரு வரம். மனித முயற்சியன்று. தெய்வம் கொடுத்ததே!

வீரப்பன் பதினைந்து வயதிலேயே சுயமரியாதைக்காரராக ஆனாலும், அவர் பிறந்த குடும்பம் பக்தி மிக்கது! புதுக்கோட்டையை அடுத்த வல்லத்தராக் கோட்டை என்



சுவாமிமலை அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலய குடமுழுக்கு விழாவில் மாண்புமிகு அமைச்சர் ஆர்.எம்.வீ. அவர்கள் கலந்து கொண்ட பொழுது எடுக்கப்பட்ட படம்

னும் கிராமத்தில் 1926ஆம் ஆண்டு செப்டம்பர் ஒன்பதாம் தேதி, இராமசாமி-தெய்வானை தம் பதியினருக்கு அவர் மகனாகப் பிறந்தார்.

நான் பிறந்த ஊருக்கு ஆறாவது கல்லில் நாச்சியாபுரம் என்ற ஊரில்தான் பதினமூன்று வயது வரை வாழ்ந்து, பள்ளிக்கல்வியை முடித்தார்.

பதினோரு வயதிலேயே இவர் கிராமக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டங்களில் பேசி, பாடி கேட்டவர்கள் இன்னும் இருக்கிறார்கள்.

பதின்மூன்று வயதில் நாச்சியாபுரத்தில் பள்ளியில் படிக்கும் போதே நாடக நடிப்புத் துறையில் பயிற்சி பெற்று, 'வள்ளித் திருமணம்' நாடகத்தை அரங்கேற்றினார். அதில் முருகனாக ''வேடன்'' வேடத்தில் நடித்து அனைவரின் பாராட்டையும் பெற்றார்.

அதையொட்டிக் கலைத்துறையில் ஆர்வம் ஏற்பட்டதன் காரணமாக பள்ளிப் படிப்பை முடித்து விட்டு 1936ஆம் ஆண்டு டி.கே.எஸ். சகோதரர்களின் நாடகக் குழுவில் நடிகராக இருந்துகொண்டே அதன் நிர்வாகத் துறையிலும் ஈடுபட்டுப் பயிற்சி பெற்றார்.

சேலத்தில் நீதிக்கட்சி, 'திராவிடர் கழகம்' என்று பெயர் மாற்றி தமிழகம் முழுவதும் திராவிடர் கழக அமைப்பு உருவானபோது, காரைக்குடியில் திராவிடர் கழகக் கிளை அமைத்து, வேலையை ராஜினாமா செய்து விட்டு முழுநேரத் தொண்டராகப் பணியாற்றினார். அடுத்த வருடம் பெரியாரின் அழைப்பை ஏற்று ஈரோட்டில் ''குடியரசு'' பத்திரிகையில் பணியாற்றினார். தந்தை பெரியாருடன் சுற்றுப் பயணங்களில் கலந்து கொண்டார். சிறிது காலம் நடிப்பிசைப் புலவர் கே.ஆர்.ஆர். அவர்களுடன் பணியாற்றிவிட்டு, அறிஞர் அண்ணாவின் 'திராவிட நாடு' பத்திரிகை காரியாலயத்தில் சிலநாள் இருந்தபின் 1953 அக்டோபர் மாதம் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்களிடம் நிர்வாகியாகச் சேர்ந்தார். 53ல்இருந்து 77-ல் அமைச்சராகும் வரை அவரிடத்தில் பணியாற்றினார்.

கட்டுப்பாட்டுக்கும் கண்டிப்புக்கும் பேர் போன எம்.ஜி.ஆரிடம் ஒருவர் இருபத்தைந்து ஆண்டுகள் சேவை புரிகிறார் என்றால் அவரது ஒழுங்கு, பண்பாடு, தகுதி திறமைகளைப் பற்றிச் சொல்லவேண்டியதில்லை.

வீரப்பன் மேடையில் காரசாரமாகப் பேசுவார், நேரிலே சிரித்துக் கொண்டுதான் பேசுவார். எந்த வேலையையும் செம்மையாகச் செய்வார். அரைகுறையாக இருக்காது. அவரே பத்துப்படங்கள் எடுத்திருக்கிறார். ''கஷ்டப் பட்டார், கடன்காரரானார் என்று எந்தக் கதையும் முடியவில்லை.

மனிதன் வாயைச் சுருக்கி வயிற்றைச் சுருக்கி நன்றி மறவாமலிருக்கக்கற்றுக்கொண்டு விட்டால் என்றுமே உன்னத நிலையில் இருக்கலாம்.

நல்ல நண்பனாக ஒருவன் கிடைத்துவிட்டால் அவனை எந்த விலைகொடுத்தும் எம்.ஜி. ஆர். காப்பாற்றிக் கொள்வார். அவரை ஒழிக்க ஒருவன் முயல்கிறான் என்றால், அவர் முயற்சி செய்யாமலேயே அவன் அழிந்து போகிறான். அவருடைய ஜாதகம், அசுர ஜாதகம். அந்த ஜாதகத்தோடு ஒட்டிக்கொண்டு விட்டதால், நடுத்தரக் குடும்பத்தில் பிறந்த வீரப்பன், நாடாளும் நல்லமைச்சராக முடிந்தது.



தங்கத்தேரில் சுவாமிமலை முருகன்

வீரப்பனைப் போல ஒரு நண்பனும் நிர்வாகியும் கிடைத்தால்யாருமே தங்கள்எதிர் காலத்தையும் நிம்மதியையும் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

எனக்கு வந்த கஷ்டமே, நல்ல நண்பர்கள் அமையாத காரணத்தினால்தானே?

பச்சை கண்டபோது பறந்து வந்து உட்கார்ந்து, பட்டு விடுமோ என்று சந்தேகப்பட்டு பறந்தோடிவிடும் பறவைகள் எத்தனையோ.

வீரப்பன் கொட்டியும் ஆம்பலும் போல, ஒட்டி உறவு கொள்ளும் பண்பாளர்; என்னுடைய கணக்கில் இன்னும் பல ஆண்டுகள் நீடிக்கப் போகும் இந்த மந்திரி சபையில் ஆலயங்களைக் காப்பாற்றும் பணியில் வீரப்பன் நற்பெயர் பெறுவார்.

என்னைப் போன்ற ஒரு இந்து, கட்டிய வீட்டைவிடக் கோயில்களையே பெரிதாக மதிக்கிறான். அந்தக் கோவில்களை யார் காப்பாற்றுகிறார்களோ அவர்களைக் கரம் கூப்பி வணங்க அவன் தயங்கமாட்டான்.

வீரப்பனிடம் எனக்கு அந்த நம்பிக்கை நிறைய இருக்கிறது.




# ஆலயத் திருப்பணிச் செல்வர்

—திருமுருக கிருபானந்த வாரியார்

மனிதனுக்கு உயர்வு அறிவினால் உண்டாகின்றது. கூர்த்த மதியுள்ளவரை தார்த்திரி போற்றும். ஆனால் எத்தனை கூர்த்தமதி இருப்பினும் பண்பு இல்லையானால் அந்த அறிவு மணம் பெறுவதில்லை.

'அரம்போலும் கூர்மையரேனும் மரம் போல்வர்
மக்கட் பண்பில்லா தவர்'

என்பது பொய்யாமொழி.

அறிவும் பண்பும் சேர்ந்திருக்குமானால் அது பொன்மலரில் மணம் வீசுவது போலாகும்.

நமது போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரிய மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் உயர்திரு இராம. வீரப்பன் அவர்கள் இந்த கூரிய அறிவும், சீரிய பண்பும் படைத்தவர். புண்ணியர் போற்றும் கண்ணியமானவர். நமது புரட்சித் தலைவர் பொன்மனச் செம்மல் டாக்டர் எம்.ஜி.ஆர். அவர்களின் இதயக்கனியானவர். அவருடைய அன்புக்கு முழுவதும் உரிமையானவர். கடமையை உடைமையாக நினைத்துத் திடமுடன் செய்யும் பேராற்றல் படைத்தவர். எல்லோரிடமும் இனிமையாகப் பழகும் அன்புரு ஆனவர்.

நமது இராம.வீரப்பன் அவர்கள் வீரமும், ஈரமும் ஒருங்கே படைத்த செம்மனச் செம்மல்,



மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் தலைமை ஏற்க, திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் விரிவுரையாற்றும் காட்சி.

இவரால் பலப்பல தேவாலயங்கள் பழுது பார்க்கப் பட்டு அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகங்கள்நடை பெற்றன.

தன்னுடைய புதல்வியின் அறுவை சிகிச்சை யன்று அன்புப் புதல்வியின் அருகில் இல்லாமல் பெரிய சிவலை விநாயகர் கும்பாபிஷேகத்தை முன்னின்று நடத்திய பெருந்தன்மை மிகவும் பாராட்டுதற்குரியது. தன் கடமையில் அதிக கவனம் உள்ளவர்.

ஆலயங்கள் வளம் பெற வேண்டுமென்று உளம் குளிர நினைப்பவர். சொல்லாற்றல் மிக்கவர். இவர் பேசும்பொழுது இவருடைய பேச்சில் கருத் தாழமும், திண்மையும், உண்மையும் ஒளிவீசும். கள்ளமில்லாத உள்ளம். எதனையும் தெள்ளத்தெளி வாகச் சொல்லும் திறம் படைத்தவர். மாற்றுக் கருத்துக்களை வன்மையாகக் கண்டித்து உண்மை யைத் திண்மையுடன் திறம்படச் பேசும் அறம் தரு சிந்தையர்.

நலிந்த கோயில்களை வலிந்து திருப்பணி செய்யச் சொல்லி பழம்பெரும் சின்னங்களைச் காத்தருளும் பண்புடையவர்.

''உற்றது கொண்டு மேல்வந்
துறுபொருள் உணரும் கேளார்''

என்று கம்பநாடார் ,அமைச்சருடைய இயல்பை அழகாக யம்பி உள்ளார்.

இந்த கம்பர் கவிக்கு முற்றிலும் இவர் பொருத் தமானவர். ஆலயங்கள் பொலிவும், வலிவும்பெற வேண்டுமென்று சிந்தித்துச் செயலாற்றும் பெருந் தன்மை உடையவர்.

அறநிலையத்துறைக்கு இவர் அமைச்ச ராக இருப்பது தங்கத் தட்டில் இரத்தின மணியை வைத்திருப்பது போலாகும்.

சொல்லில் இனிமையும், உள்ளத்தில் திட்ப மும், அறிவில் நுட்பமும் புன்னகை பூத்த முகமும் படைத்தவர். இவருக்கு எல்லா நலங்களும் இறை யருளால் வளர்க.

நேரிசைவெண்பா

மூவிருப தாண்டு முருகன் திருவருளால்
பூவுலகில் எய்தியுயர் புண்ணியன்-மேவுபுகழ்
செம்மனச் செம்மல் திருவளர் வீரப்பன்
தெம்மடங்க வாழ்க செழித்து.

---



# தேடக் கிடைக்காத செல்வம்

ஆடிக் கிருத்திகைக்கு ஓடிவந்து வணங்கிடுவோம்
தேடக் கிடைக்காத செல்வமே முருகா!
பாடிப் பரவசமாய்ப் பதமலர் பணிந்திடுவோம்
கூடும் அடியவர்க்குத் தெய்வமே முருகா! (ஆடிக்)

மயில்தோகை காவடிகள் தோளேந்தும் அடியவர்கள்
தாள்தாங்கும் பூமியிலே குமரா!
புரண்டாடிப் புழுதியிலே மகிழ்ந்தாடி உனைப் போற்றிப்
படிமயறும பாக்கியம்தா குமரா! (ஆடிக்)

பாலருவி நீராடி வெண்ணீற்று மணம்பூசிப்
பட்டாடை உடுத்திருப்பாய் வடிவேலா!
கோலத் திருமேனி அசைந்தாடும் பூமாலை
குடைந்தாடும் வண்டாக அருள்வேலா! (ஆடிக்)

கங்கைச் சரவணத்தில் மங்கை அறுவரிடம்
கொங்கைப் பாலுண்ட கார்த்திகேயா!
அங்கை வழிந்தோட கிருத்திகை நாள்உந்தன்
அபிஷேகப் பாலுண்ணஅருள் தாதா! (ஆடிக்)

— டாக்டர் த. அமிர்தலிங்கம்

# பராக்கிரம பாண்டியனின் கல்லெழுத்து உயிர் பெறுகிறது

தவத்திரு
குன்றக்குடி அடிகளார்

மனிதனின் அகநிலை அறிவுக் கருவிகளில் சித்தம், மிகமிக அற்புதமான கருவி. ஆன்மாவின் அகநிலை மாட்சிமைக்குரிய சித்தத்தின் இயக்கம் சிந்தனை. சிந்தனை செய்பவர்கள் மனிதர்கள். சிந்தனையில் தெளிவு காண்பவர்கள் மாமனிதர்கள். ''சிந்தையும் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி'' என்பார் அப்பரடிகள். 'தெய்வம் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்' என்பார் இளங்கோவடிகள்.

ஆர்.எம்.வீ. அவர்கள் சிந்திப்பவர்; சிந்தனைச் செல்வம் நிறைந்தவர்.;புதிய சிந்தனை உடையவர். உழுதசால் வழிச் செல்லும் இயல்பினராகச் சிலர் இன்றும் நாத்திகர்கள் போல் பேசுகின்றனர்; எழுதுகின்றனர். இந்தப் போக்கினை ஆர்.எம்.வீ. அவர்கள் எதிர்க்கிறார். கடவுள் நம்பிக்கை, மனிதன் யோக்கியனாக இருக்கவும் வாழவும் தேவை என்பது ஆர்.எம்.வீ. அவர்களின் தெளிவான முடிவு; கருத்து. எண்ணற்ற உவமைகள் மூலம் இக்கருத்தினை விளக்கி அவர் உரை நிகழ்த்துவது அற்புதமாக அமைந்து விளங்குகிறது.

ஆர்.எம்.வீ. அவர்களுக்குப், பழைய மன்னர்கள், அவர்கள் கண்ட மரபுகள் மீது நல்ல பற்று. மாமன்னன் இராசராசன் நினைவாக 60 திருக்கோயில்களுக்குத் திருப்பணி - கோச்செங்கட் சோழனைப் பின்பற்றிச் செய்து திருப்பணிச் செல்வராக விளங்குகிறார். தென்காசித் திருக்கோயில் பலநூறு ஆண்டுகளாக முற்றுப்பெறாது நின்ற திருக்கோயில். இன்று திருப்பணி செய்யப்பெறுகின்றது. அன்று தென்காசித் திருக்கோயிலை எடுத்த பராக்கிரம பாண்டியன், ''எதிர்காலத்தில் இத் திருக்கோயிலிருந்து விழும் ஒரு கல்லை எடுத்து வைப்பார் திருவடிகளை இப்போதே என் தலைமீது வைத்து வணங்குகின்றேன்'' என்று எழுதி வைத்தான். இன்று பராக்கிரம பாண்டியன் கல்லெழுத்து உயிர் பெறுகிறது. ஆர்.எம்.வீ. அவர்களை, பராக்கிரம பாண்டியனின் ஆன்மா வாழ்த்துகிறது.

அறம் செய்தல் நன்று. அறம் செய்ய இயலாத பொழுது மற்றவர் செய்யும் அறத்தைச் சிதைக்காமலாவது இருக்கவேண்டும். அறம் பாதுகாக்கப்படவேண்டியஒன்று. அறம் பேணுதல் என்ற கொள்கையில் ஆர்.எம்.வீ. அவர்களுக்கு நிறைந்த ஈடுபாடு. அறம் காக்கப்படுதல் வேண்டும்: அறம் பேணி வளர்க்கப்பெறுதல் வேண்டும் என்ற கொள்கையில் அயர்விலா ஆர்வம் ஆர்.எம்.வீ. அவர்களுக்கு உண்டு. ''அறம் செய்தானே செய்தான். அறம் காப்பான் திருவடிகள் அறம் செய்தானின் சிரசின்மீது'' என்ற பொன் மொழியைப் பொன்னே போல இவர் போற்றுகிறார். அறம் கிடந்த நெஞ்சுடன்அறநிலையங்களுக்கு அளித்த நிலங்களிலிருந்து முறையான ஒரு பங்கை விவசாயிகள் தர வேண்டும் என்ற கொள்கையை உறுதியாக நம்புகிறார்; துணிவுடன் இந்த அறக்கொள்கையை எடுத்துக் கூறுகிறார். அரசியலுக்கும் மேற்பட்டதாக அறநெறிகளைக் கருதுகிறார்.

திருக்கோயில்களைப் பேணி நிலை நிறுத்துதலிலும், முறையாக வழிபாடுகள் நிகழவேண்டும் என்பதிலும் ஆர்.எம்.வீ. அவர்களுக்கு அளவற்ற ஆர்வம் இருக்கிறது. தமது ஆர்வத்தை அடைவதற்குரிய முயற்சிகளையும் மேற்கொண்டுள்ளார். ஆர்.எம்.வீ அவர்களின் ஆர்வங்கள் அனைத்தும் செயற்பாடுற தமிழ்மக்கள் ஒத்துழைப்புத்தர வேண்டும். ஆர்.எம்.வீ. அவர்கள் செழுந்தமிழ் வழக்கு வெற்றி பெற விரும்புகின்றார். நாளும் நன்மை பெருகி அருள் நெறி வளர அயராது பணி செய்கின்றார். இது இந்தத் தமிழ்த் தலைமுறை பெற்ற பேறு.

ஆர்.எம்.வீ. அவர்கள் மணிவிழாக் காண்பது மகிழ்ச்சியைத் தருகிறது. தமிழ்ச்சமய உலகத்திற்கும் அறிவுலகத்திற்கும் கிடைத்த மணியெனப் பாராட்டத்தக்கவர் மணிவிழாக் காண்பது மகிழ்ச்சியைத் தருகிறது. ஆர்.எம்.வீ. அவர்கள் மேலும் ஆயிரம் பிறை கண்டு நீலமணிமிடற்றிறைவன் போல வாழ்க! வாழ்க!






—தவத்திரு ஊரன் அடிகள்

அறநிலையத்துறைக்கு ஒரு பொற்காலம் உண்டு என்றால் அது பொன்மனச்செம்மல் எம்.ஜி.ஆர். அவர்கள் ஆட்சிக்காலம்தான்.

இந்திய சுதந்திரத்திற்குப் பின்பு தமிழக அரசின் அறநிலையத்துறைக்கு முற்றிலும் பொருத்தமான ஓர் அமைச்சர் முதன்முதலாக இப்போதுதான் வாய்த்திருக்கிறார். இதற்கு முன் இப்படி ஓர் அமைச்சர் அறநிலையத்துறைக்கு வாய்த்ததில்லை.

## வேலூர்ப் புரட்சி

வேலூர்க் கோட்டைக் கோயிலுக்குள் இருந்த சிவலிங்கம் இஸ்லாமியர் ஆட்சிக் காலத்தில் அகற்றப்பட்டு வழிபாடு நின்றுபோயிற்று. ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் அக்கோயில் தொல்பொருள் ஆய்வுத் துறையின் பாதுகாக்கப் பெற்ற நினைவுச் சின்னமாகி விட்டது. காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில், கோட்டைக் கோயிலுக்குள் மீண்டும் சிவலிங்கம் நிறுவி வழிபட வேலூர் ஆத்திகப் பெருமக்கள், அனைத்து ஆத்திக சங்கங்கள், நாயன்மார் அறுபத்து மூவருக்குப் பின் அறுபத்து நாலாமவராக இன்று நம்மிடையே விளங்கும் கிருபானந்த வாரியார் உட்பட ஆத்திக உலகம் முழுவதுமே அரசை வேண்டிற்று. அன்றைய காங்கிரஸ் ஆட்சி ஆர்க்கியாலஜிகல் டிபார்ட்மெண்டின் ஆட்சேபனையை மதித்ததே ஒழிய ஆத்திக உலகத்தின் நியாயமான கோரிக்கையை மதிக்கவில்லை.

வேலூர் ஆத்திக அன்பர்களின் பொறுமை அதன் எல்லையைக் கடந்தது. அண்மையில் ஒரு நாள் அதே பழைய சிவலிங்கம், கோட்டைக் கோயில் கருவறைக்குள் வந்துவிட்டது. வேலூர் ஆத்திகப் பெருமக்கள் பலர் கூடி மயிலை குருஜி சுந்தரராமன் முதலிய பெரியோர்களது தலைமையில் இரவோடு இரவாகக் கோட்டை கோயிலில் சிவலிங்கப் பிரதிட்டையைச் செய்தே விட்டனர். பொழுது விடிந்தது. தொல் பொருள்துறை காவல் துறைக்குப் போயிற்று. நீண்ட நாளைய ஏமாற்றத்தின் பின் எழுந்ததும் நியாயமானதுமான ஆத்திகப் பெருமக்களின் பேரெழுச்சியை எதிர்த்து அரசு எதையும் செய்ய விரும்பவில்லை. ஆட்சித்துறையும் காவல்துறையும் எதிர் நடவடிக்கை எதுவும் எடுக்க வில்லை. தொல்பொருள் துறை நீதிமன்றத்திற்கு போயிற்று. பின்னர் அதுவே கோபுரத் திருப்பணியைச் செய்து கொடுக்க முன் வந்துவிட்டது.

அரசன் இல்லாத கோட்டை, சாமி இல்லாத கோயில், நீர் இல்லாத ஆறு என்று அடுக்கடுக்காக பேசப்படும் வழக்கில் ஒன்று நீங்கிற்று. சுவாமி இல்லாத கோயில் சுவாமியுள்ள கோயிலாயிற்று.

எம்.ஜி.ஆர். மூன்றெழுத்து. ஆர்.எம்.வீ.யும் மூன்றெழுத்து. எம்.ஜி.ஆரில் ''ஆர்'' முடிவு. ஆர்.எம்.வீயில் ''ஆர்'' முதல். முதலும் முடிவும் ஒன்றாக இருப்பது ஒருவகைப் பொருத்தம். அவர் வழியில் இவர் செல்கிறார். அவர் எண்ணத்தை இவர் முடிக்கிறார். அவர் செய்யும் முடிவை இவர் நிறைவேற்றுகிறார் என்று பொருள்.

அன்று ஆங்கில ஆட்சிக் காலத்தில் வேலூரில் நடந்தது அரசியற் புரட்சி. வரலாறு அதனை வேலூர்ப் புரட்சி என்றே கூறும். இன்று வேலூரில் நடந்த இந்தப் புரட்சி சமயப் புரட்சி. இதனை இந்நாளைய வேலூர்ப் புரட்சி, இரண்டாம் வேலூர்ப் புரட்சி என நாம் அழைப்போம். இன்றியமையாத இப்புரட்சிக்குப் புரட்சித் தலைவரின் அரசு இடம் கொடுத்தது.

## எங்கும் திருப்பணி எங்கும் குடமுழுக்கு

அண்மைக் காலத்தில் சில ஆண்டுகளாக எங்கு பார்த்தாலும் திருப்பணிகள் நடைபெறுகின்றன. ஓடாத தேர்களெல்லாம் ஓடுகின்றன. இதற்கு முன் இவை இவ்வளவு அதிகமாக இல்லை. காரணங்கள் பல எனினும், அன்பர் ஆர்.எம்.வீ.யின் அமைச்சுப் பணியும் ஒரு முக்கிய காரணம்.

## தங்கத்தேர்கள்

முன்பெல்லாம் ஓரிரு பெருங்கோயில்களிலேயே தங்கத் தேர்கள் இருந்தன. வரவர எல்லாப் பெரிய கோயில்களுமே தங்கத்தேர் செய்யத் தொடங்கின. இன்று பல கோயில்களில் தங்கத் தேர்கள் ஓடிக்

கொண்டிருக்கின்றன. பொன்மனச் செம்மலின் ஆட்சியிலே பொன்தேர்கள் மிகுவது பொருத்தந் தானே?

## ஆலய மேம்பாட்டுத் திட்டம்

உலகிலேயே அதிக வருமானமுள்ள கோயில் திருப்பதி. அது ஆந்திர மாநிலத்தில் உள்ளது. தமிழகத்தில் அதிக வருமானமுள்ள கோயில் பழநி. பிரார்த்தனைத் தலங்கள் என்ற பெயரால் பழனி, திருத்தணி, திருச்செந்தூர், கந்தக்கோட்டம், சமயபுரம் போன்ற கோயில்கள் ஓரளவு செல்வச் செழிப்புடன் திகழ்கின்றன.

நாட்டு மக்களிற் பெரும்பாலோர் வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ளது போன்று, தமிழ்நாட்டுக் கோயில்களில் பெரும் பாலானவை வறுமைக் கோட்டுக்குக் கீழேயே உள்ளன. பல கோயில்களில் பராமரிப்புக்கும் பூசைக்கும் சம்பளத்துக்குமே பணம் இல்லை. ''ஆலயக் கதவை அடைத்து வைத்தேனே'' என்றார் வள்ளலார். சில ஆலயங்களில் கதவுகள் அடைக்கவும் நேரிட்டன. ஆலைக் கத வடைப்பு சகஜமானது. ஆனால் ஆலயக் கத வடைப்போ, புதுமையானது; என்றுமில்லாதது. இன்று ஆலயங்கள், நாளை அரண்மனைகள். ஆலயக் கதவுடைப்பு அரசுக்கு நன்றன்று.

இந்நிலையை நீக்க எண்ணி ஆர்.எம்.வீ. கொண்டு வந்தார் ஒரு திட்டம். அதுதான் ஆலயங்கள் மேம்பாட்டுத்திட்டம். ஏழு கோடி ரூபாய் வைப்பு நிதி திட்டத்தின் தொடக்க விழா 15.8.84 சமயபுரத்தில் நிகழ்ந்தது. ஓராண்டுகூட நிறைய வில்லை. அதற்குள்ளாகவேஅத்திட்டத்தின் செயல் முறைத் தொடக்க விழா தஞ்சையில் 20.7.85ல் நிகழ்ந்தது.



**ஆதரவற்ற முதியோர்களுக்குப் பழநி ஆலயத்தின் சார்பில ஆலயத்தக்கார் வேட்டி, சேலை வழங்குகிறார்.**

ஆலயங்களில் மேம்பாட்டுத் திட்டம் ஏழுகோடி ரூபாய் நிதியமைப்பு:

*திட்டத்தொடக்கவிழா-15.8.1984 சமயபுரம் திட்டச் செயல்முறைத் தொடக்கவிழா—*

*20.7.1985 தஞ்சாவூர்*

*150 கிராமக்கோயில்களுக்கு நிதி நல்கும்விழா*

*—13.3.1986 வடபழநி*

## 479 செயல் அலுவலர்கள்

தற்போது தமிழ்நாட்டில் 1801 திருக்கோயில்கள் செயல் அலுவலர்கள் பொறுப்பில் உள்ளன. இக்கோயில்களை 479 செயல்அலுவலர்கள் நிர் வாகம் செய்து வருகிறார்கள்.

அவர்கள் விவரம்:

| | |
|---|---|
| முதல்நிலை செயல்அலுவலர்கள் | 52 |
| இரண்டாம் நிலை செயல் அலுவலர்கள் | 117 |
| மூன்றாம் நிலை செயல் அலுவலர்கள் | 172 |
| நான்காம்நிலை செயல் அலுவலர்கள் | 138 |

*1300 கோயில்களுக்கு ஒருவேளை பூசைக்காக தலா ரூபாய் 5000 நிதி வழங்கும் விழா*

*—12.8.86 திருவையாறு,*

செயல்முறைத் தொடக்க விழா தஞ்சை பெரிய கோயிலில் நிகழ்ந்தது. தஞ்சையை ஏன் அமைச்சர் தேர்ந்தெடுத்தார்? காரணம் பலவாக இருக்கலாம். ஆனால் ஒன்று; உலகிலேயே இந்தியாவில்தான் கோயில்கள் மிகுதி. அதிலும் தமிழ்நாட்டில் தான் மிகுதி. அதிலும் தஞ்சை மாவட்டத்தில் தான் மிகுதி. ஏழைக் கோயில்களும் அங்குதான் மிகுதி.

ஏழு கோடி திட்டத்தின் ஐந்து கோடி ரூபாயின் வட்டி வருவாயிலிருந்து குறைந்த வருமானமுள்ள கோயில்களின் பூசைக்கு உதவி நிதி வழங்கப் பெற்றது. அர்ச்சகர்கள், பிற பணியாளர்களுக்குச் சம்பள பாக்கி நிலுவையும் வழங்கப் பெற்றது. ஒரு கோடியின் வட்டி வருவாயிலிருந்துஆலய ஊழியர்களின் நல நிதி வழங்கப் பெற்றது. இன்னும் ஒரு கோடியின் வட்டியில் இருந்து கிராமக் கோயில்களுக்குத் திருப்பணி நிதி வழங்கப் பெற்றது. இவையெல்லாம் இன்றைக்கு நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. நல்ல திட்டம். நன்றாகச் செயல்படுத்த வேண்டும். செயல் படுத்துவார் ஆர்.எம்.வீ. என்ற நம்பிக்கை உண்டு.

## ஆகஸ்ட் 15 சமபந்தி போஜனம்:

ஆகஸ்ட் 15 இந்திய சுதந்திர நாள். அன்று தமிழகத்தின் அனைத்து ஆலயங்களிலும் அரிஜனங்கள் உட்பட அனைவர்க்கும் சமபந்தி போஜனம். அமைச்சர்களும் அதிகாரிகளும் சமயத் தலைவர்களும் சமுதாயத் தலைவர்களும் உள்ளூர் பிரமுகர்களும் பொதுமக்களும் இவ்வாறு அனைத்துத்தரப்பினரும் கலந்து கொள்ளும் ஓர் அருமையான ஏற்பாடு.

மறைமலையடிகள் செய்த சமபந்தி போஜனம் ஒரு வரலாற்றையே படைத்தது. ''சாமி வேற்றுமையும் போலிச் சைவரும்'' என்ற அவர் நூலின் முன்னுரையில் அதனைக்காணலாம். திரு.வி.க.வின் சமபந்தி போஜனங்களை அவரது சுயசரிதத்தில் காணலாம். சாதி ஒழிப்புக்குச் சமபந்தி போஜனமும் ஒரு முக்கியமான வழி. அதனைத் திருக் கோயில்களில் செய்ய வழி வகுத்த ஆர்.எம்.வீ. வாழ்க! வாழ்க!

## தங்கரதம் உள்ள திருக்கோயில்கள்

1. அருள்மிகு தண்டாயுதபாணிஸ்வாமி திருக்கோயில், பழனி, அண்ணாமாவட்டம்.

2. அருள்மிகு சுப்பிரமணியஸ்வாமி திருக்கோயில், திருச்செந்தூர், திருநெல்வேலி மாவட்டம்.

3. அருள்மிகு சுப்பிரமணியஸ்வாமி திருக்கோயில், திருத்தணி, செங்கற்பட்டு மாவட்டம்.

4. அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில், மதுரை.

5. அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில், சமயபுரம், திருச்சிராப்பள்ளி மாவட்டம்.

6. அருள்மிகு சுவாமி நாதஸ்வாமி திருக்கோயில், சுவாமி மலை, தஞ்சாவூர்மாவட்டம்.

7. அருள்மிகு வடபழனியாண்டவர் திருக்கோயில், வடபழனி, சென்னை.

8. அருள்மிகு கந்தசாமி திருக்கோயில், பார்க்டவுன், சென்னை.

9. அருள்மிகு சங்கரநாராயணஸ்வாமி திருக்கோயில், சங்கரன்கோயில், திருநெல்வேலி மாவட்டம்.

10. அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில், இரத்தினகிரி வேலூர்.

11. அருள்மிகு காமாட்சியம்மன் திருக்கோயில் பெரியகாஞ்சிபுரம், செங்கற்பட்டுமாவட்டம்.

12. அருள்மிகு தேவிகருமாரியம்மன் திருக்கோயில், திருவேற்காடு, சென்னை.

மேலும் ஆறு திருக்கோயில்களில் தங்கத்தேர் திருப்பணி தொடங்கி விரைவில் நிறைவுறும் நிலையில் இருப்பது குறிப்பிடத்தக்கது. மேல்கண்டவற்றில் முதல்மூன்றுதங்கத்தேர்களைத் தவிர மற்றைய தங்கத்தேர்கள் அனைத்தும் கடந்த ஒன்பதாண்டுக் காலத்தில் செய்து முடிக்கப் பட்டவை ஆகும்.

## கம்பர் கோட்டம்:

தமிழுக்குக் 'கதி' யாவார் - இருவர். க-கம்பர் தி-திருவள்ளுவர் என்பது பழமொழி. திருவள்ளுவர் கோட்டம் முன்னரே ஏற்பட்டு விட்டது. கம்பருக்கு அத்தகையதொன்று அமையாதிருந்தது வெகுநாளைய குறை. அக்குறையை நீக்கினார் ஆர்.எம்.வீ. கம்பர் பிறந்த தேரழுந்தூரில் கம்பர் கோட்டங் கண்டார்.

## சேக்கிழார் விழாவில் நிகழ்ந்த அற்புதம்:

சென்னை அருகே உள்ள குன்றத்தூர், சேக்கிழார் அவதரித்த ஊர். சேக்கிழார் பிறந்த இடத்தில் அவருக்கு ஒரு கோயில் கட்டப் பெற்றிருக்கிறது. அதற்குச் சேக்கிழார் கோயில் என்று பேர். சோழ நாட்டு அமைச்சராக விளங்கிய சேக்கிழார், சோழ நாட்டுத் திருநாகேச்சுரத்திற்கொண்ட பேரீடுபாட்டினால், தாம் பிறந்த தொண்டை நாட்டிலும், குன்றத்தூரிலும் ஒரு கோயிலைக் கட்டி அதற்குத் திருநாகேச்சுரம் என்றே பெயரிட்டார். குன்றத்தூரில் திரு நாகேச்சுரம் கோயில் உள்ள பகுதி பின்னாளில் திருநாகேஸ்வரம் என்றே பெயர் பெற்றது. குன்றத்தூரில் சேக்கிழார் தொடர்பாக இரண்டு கோயில்கள் உள்ளன. ஒன்று சேக்கிழாரே கட்டிய திருநாகேஸ்வரம் கோயில். மற்றொன்று சேக்கிழார் பிறந்த இட்த்தில் பின்னாளில் கட்டப்பெற்ற சேக்கிழார் கோயில். ஊரைப் பொதுவாகக் குன்றத்தூர் என்றாலும் சேக்கிழார் கோயில் இருக்கும் பகுதிக்கு நத்தம் என்றும், திருநாகேஸ்வரம் கோயில் இருக்கும் பகுதிக்கு திருநாகேஸ்வரம் என்றும் பெயர். இதைத் தவிர மலைமீது ஒரு முருகன் கோயில் உண்டு. அவை தவிர பழமையான சிவன் கோயில் ஒன்றும், விஷ்ணு கோயில் ஒன்றும் உண்டு.

சேக்கிழார் கோயிலுக்கும் திருநாகேஸ்வரம் கோயிலுக்கும் இடையே உள்ள தூரம் ஒரு மைல் அல்லது ஒன்றரைமைல் இருக்கும். திருநாகேஸ்வரம் கோயில் திருவிழா நடைபெறும் போது ஒருநாள் சேக்கிழார் கோயிலிலிருந்து சேக்கிழாரின் திரு உருவத்தைத் திருநாகேஸ்வரம் கோயிலுக்கு எழுந்தருளச் செய்து திரும்புவது பண்டைக்காலந் தொட்டு வழங்கி வந்த வழக்கம். சேக்கிழார் நாள் தோறும் திருநாகேஸ்வரத்துக்குச் சென்று வழிபட்டு வந்ததன் நினைவாக அமைந்த இவ்வழக்கம் இன்றைக்கு அறுபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு சமயம் நின்று போயிற்று.

திருநாகேஸ்வரம் கோயில், செங்குந்த முதலியார் சமூக நிர்வாகத்தில் உள்ளது. சேக்கிழார் கோயில் தொண்ட மண்டல முதலியார் சமூக நிர்வாகத்தில் உள்ளது. இரண்டும் தனித்தனி நிர்வாகம். சேக்கிழார் கோயில் தொண்டமண்டலத்தார், தங்கள் திருநாகேஸ்வரம் கோயில் நிர்வாகத்தையும் கைப்பற்றிக் கொள்வார்களோ என்று திருநாகேஸ்வரச் செங்குந்தர்கள் அந்நாளில் அஞ்சினார்கள் போலும். இருவகையார்க்கும் ஏதோ பிணக்குண்டாகி (கோர்ட் வழக்கு, தடை உத்தரவு வரையிலும் போனதாகக்கேள்வி) சேக்கிழார் திருமேனி, அவர் பிறந்த இடத்துக் கோயிலிலிருந்துதிருநாகேஸ்வரம் கோயிலுக்குச் சென்று வருவது நின்று போயிற்று. ஆண்டு ஒன்றா, இரண்டா? அறுபது ஆண்டுகள். அதன் மேலும் இரண்டு ஆண்டுகள். அறுபத்திரண்டு ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. விஷயம் பழைய கதையாகி விட்டது. சஷ்டியப்தபூர்த்தி -மணிவிழா-கண்டவர்களுக்கே இது தெரியாது. கடைசியாக அது நிகழ்ந்து நின்று போன சமயம்தான் அவர்கள் பிறந்திருப்பார்கள். எண்பதாண்டு நிறைவு சதாபிஷேகம் கண்டவர்கள் அது சமயம் இருபதாண்டு இளைஞராயிருந்திருப்பர். அவர்களுக்கு இது நேரில் தெரிந்திருக்கலாம்.

அமைச்சர் ஆர்.எம்.வீ. இச்செய்தியை அறிந்தார். துடித்தார். செங்குந்தர் என்றும் தொண்ட மண்டல முதலியார் என்றும், இந்தக் கோயில் இவர் ஆட்சி, அந்தக் கோயில் அவர் ஆட்சி என்றும்

இரு சமூகங்களுக்கிடையே அறிந்தோ, அறியாமலோ ஏற்பட்ட வேற்றுமை சேக்கிழாரை அவர் கட்டிய கோயில்களுக்குள்ளேயே நுழையவிடாதபடி தடுத்து நிறுத்திவிட்டதே என்று எண்ணினார். நாம் அறநிலையத்துறை அமைச்சராக இருந்து என்ன பயன்? என்று ஏங்கினார்.

ஒரு நாள் எவ்வித முன்னறிவிப்பும் இன்றி நேரே குன்றத்தூர் சென்றார். சேக்கிழார் கோயிலையும், திருநாகேஸ்வரம் கோயிலையும் கண்டார். இரு கோயில்களின் நிர்வாகங்களையும் அழைத்துப் பேசினார். அதன் பயன் 18.5.1985ல் குன்றத்தூரில் நிகழ்ந்தது சேக்கிழார் விழா. சேக்கிழார் கோயில் திருப்பணித் தொடக்கவிழா. அதில் நிகழ்ந்த அற்புதம். சேக்கிழார் விழாவை அறநிலையத்துறையே நடத்தியது. சேக்கிழார் கோயில் திருப்பணி முன்னரே தொடங்கப்பெற்றது. ஆயினும் பணிகள் எதுவும் செய்யப்பெறவில்லை. நின்று போயிருந்த அதனை மீண்டும் தொடக்குவித்தார் அமைச்சர் ஆர்.எம்.வீ. இனித் தொடர்ந்து நடைபெற்று நிறைவுறும் வாய்ப்புண்டு. சேக்கிழார் விழா நிகழ்ந்த சமயம் சேக்கிழார் கோயிலிலும் திருவிழா; திருநாகேஸ்வரம் கோயிலிலும் திருவிழா. அமைச்சரின் சமரசப் பேச்சால், அறுபத்துஇரண்டு ஆண்டுகளுக்கு முன் நின்று போன தொன்று தொட்ட வழக்கமான நிகழ்ச்சிக்குப் புத்துயிர் ஊட்டப்பெற்றது. திருநாகேஸ்வரம் கோயிலார் சேக்கிழார் கோயிலிலிருந்து சேக்கிழார் திருமேனி எழுந்தருளித் தம் கோயிலுக்கு வருவதை வரவேற்க இசைந்தனர். சேக்கிழார் கோயிலாரும் மகிழ்ச்சியுற்றனர்.



பழநி தண்டாயுதபாணிசாமி ஆலயத்தில் நடந்த பொது விருந்து நிகழ்ச்சியில் தக்கார் திரு. க. பொன்னுசாமி உணவு பரிமாறுகிறார்.

அன்று இரவு சேக்கிழார் விழாவின் நிறைவில் அமைச்சர் முன்னிலையில் சேக்கிழார் திரு நாகேசுவரம் ஆலயத்துள் பிரவேசித்தார். சேக்கிழாரின் விழாத் திருமேனி (உற்சவமூர்த்தி) சிறப்பாக அணி செய்யப்பெற்று (அலங்கரிக்கப்பெற்று)த் திருநாகேஸ்வரம் திருக்கோயிலுக்கு எழுந்தருளிற்று. அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் முன் செல்ல, காஞ்சிபுரம் தொண்டமண்டல ஆதீனம் குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாசதேசிக பரமாச்சாரியசுவாமிகளும், வடலூர் வள்ளலார் சன்மார்க்க நிலையங்களின் தக்கார் ஊரன் அடிகளாகிய யாமும் இரு பக்கமும் வர, ஓதுவார் திலகம் தருமபுரம் சுவாமிநாதன் தலைமையில் பன்னிரு ஓதுவாமூர்த்திகள் பன்னிரு திருமுறைகளும் ஓதிவர, பக்தர் கூட்டம் புடைசூழ, திருநாகேஸ்வரம் திருக்கோயில் நிர்வாகிகள் திருக்கோயில் திருவாயிலில் சேக்கிழார் பெருமானுக்கும், அமைச்சர்க்கும், சந்நிதானத்திற்கும், அடிகட்கும் மரியாதை செய்து வரவேற்க, சேக்கிழார் அறுபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பின்பு ஆலயப்பிரவேசம் செய்தார். செய்வித்த புகழும் புண்ணியமும் பெருமையும் அமைச்சர் ஆர்.எம்.வீ அவர்களையே சாரும்.

திருநாகேஸ்வரம் ஆலயத்துள்ளும் ஒரு கூட்டம் நடைபெற்றது. நேரம் இரவு பதினோருமணி. சேக்கிழார் முன்னிலையிலேயே நிகழ்ந்த இக்கூட்டத்திற்கு அருமையான ஏற்பாடுகளைத் திருநாகேஸ்வரம் கோயில் நிர்வாகிகள் செய்திருந்தனர். ஆணையர் தொடங்கி வைத்தார். தொண்டமண்டல ஆதீன குருமகாசந்நிதானம் ஆசி வழங்கினார். நமது சிறப்புரையும் நிகழ்ந்தது. இந்த ஆண்டு போல் இந்நிகழ்ச்சி ஒவ்வோராண்டும் நடைபெற வேண்டும் என்றும், மதுரையில் அழகர் ஆற்றுத் திருவிழாவைப் போல் குன்றத்தூரில் சேக்கிழார் விழா, சேக்கிழார் தமது திருக்கோயிலிருந்து தாம் கட்டிய திருநாகேஸ்வரம் கோயிலுக்கு எழுந்தருளி வழிபடும் விழா சென்னை, செங்கற்பட்டு மாவட்டங்களின் பெருவிழாவாய் திகழ வேண்டும் என்றும் யாம் வேண்டினோம். நிறைவில் அமைச்சர் உணர்ச்சி வயப்பட அரியதோர் உரையாற்றினார். குன்றத்தூரில் சேக்கிழார் விழா ஆண்டுதோறும் அறநிலையத்துறை சார்பில் நிகழும் என்றும் அறத்துறை அமைச்சர்களும் தவறாது கலந்துகொள்ளும் மரபு ஏற்படும் என்றும், கம்பருக்குக் கோட்டங் கண்டதுபோல் சேக்கிழாருக்கும் கோட்டம் அமைக்கப்பெறும் என்றும் உறுதி கூறினார்.

சேக்கிழாரின் பெரிய புராணம் ஒரு புரட்சிக் காப்பியம். சமய வழி அது பெரும் சமுதாயப் புரட்சியைக் கண்டது. சாதி ஒழிப்புக்கு உதவும் நூல் அதினிலும் வேறொன்றுமில்லை.

சேக்கிழார் அமைச்சராகத் திகழ்ந்து மாபெரும் கவிஞராகவும் அடியாராகவும் திகழ்ந் வர். சேக்கிழார் விழா நாடெங்கும் எடுக்கப்பெறவேண்டும், பெரிய புராணப் புரட்சி நாடெங்கும் ஏற்படவேண்டும்.

அறநிலையத்துறை மேலும் மேலும் நற்பணிகளில் பலவற்றைச் செய்து சான்றோர் வாழ்த்தும் பேற்றைப் பெறுவதாக. சான்றோர் வாழ்த்தும் பேற்றைப் பெற்றுவரும்அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் மேலும் மேலும் சான்றோர் வாழ்த்தப் பல்லாண்டு நற்பணிகள் பல செய்து வாழ்க! வாழ்க! வாழ்க!

# அறநிலையத்துறையின் சாதனைகள்

திரு க. சுந்தரமூர்த்தி, ஐ.ஏ.எஸ்.

ஆணையாளர்

இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை, தமிழ்நாடு அரசு.

நம் தமிழ் நாட்டில் பழங்காலத்தில் கோயில்களே கல்வி நிலையங்களாக விளங்கின. கலை வளர்க்கும் கழகங்களாகத் திகழ்ந்தன. ஏழை எளியவர்களை உணவளித்துப் பாதுகாக்கும் அறச்சாலைகளாக அமைந்திருந்தன. மருத்துவ மனைகளாகப் பணி புரிந்தன. தொழில் தரும் நிறுவனங்களாகத் தொண்டாற்றின. பொது மக்களுக்குப் பொருள் கொடுத்தும் வாங்கியும் உதவி புரியும் நிதி நிலையங்களாக இயங்கின.

இவ்வாறு நம் தமிழகத்தில் சமய இயல், சமுதாய இயல், கலையியல், கல்வியியல், பண்பாட்டியல், பொருளியல், நாகரிக இயல் முதலிய பல்வேறு துறைகளிலும் தொடர்பு கொண்டு மக்கட் சமுதாயத்திற்கு நலன்கள் பல செய்து வந்த திருக்கோயில்கள் ''சமுதாய நல நிலையங்கள்'' ஆகத் திகழ்ந்த வரலாற்றை நமக்கு இலக்கியங்கள் படம்பிடித்து காட்டியுள்ளன.

இத்தகைய சமுதாய நல நிலையங்களாகிய தமிழகத் திருக்கோயில்களின் நிர்வாகத்தினைக் கண்காணிக்கும் பொறுப்பைத்தமிழக அரசே ஏற்று சிறப்பாக நடத்தி வருகின்றது. கடந்த ஏழெட்டு ஆண்டுக் காலமாகத் தேவை



திருச்செந்தூர் நகரக் குடிநீர்த் திட்டத்திற்கு அறநிலையத்துறை ஆணையர் திரு. க. சுந்தரமூர்த்தி, ஐ.ஏ.எஸ். அவர்கள் அருள்மிகு சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானத்தின் சார்பில் காசோலையை மாவட்ட ஆட்சித் தலைவரிடம் வழங்குகிறார். ஆலயத் தக்கார் S. R. சுப்பிரமணிய ஆதித்தன் M.L.A., மற்றும் துணை ஆணையர் K. நந்தகோபால் ஆகியோர் உடன் உள்ளனர்.

யான பல சட்டத் திருத்தங்கள் மூலமாகவும், ஆணைகள் மூலமாகவும் நிருவாகச் சீர்திருத்தங்கள் பலவற்றை உண்டாக்கி ஆன்மீகத்துறையின் பொற்காலம் இக்காலமே என்று ஆன்றோர்கள் போற்றுமாறு அறநிலையத்துறையின் நிர்வாகம் சீரும் சிறப்புமாக நடைபெற்று வருகிறது.

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் ஆளுகையின் கீழ் 34,340 சமய நிறுவனங்கள் தற்போது உள்ளன. இதில் திருமடங்கள் 56ம் சேர்ந்து அடங்கும். இவற்றில் ஆண்டு வருமானம் ஒரு இலட்சத்திற்கு மேற்பட்டன 186 நிறுவனங்கள். ஆண்டு வருமானம் ரூ. 10,000-க்கு மேற்பட்டன 1612 நிறுவனங்கள், ஆண்டு வருமானம் ரூ.10,000-க்குக் கீழ்ப்பட்டன 32542 நிறுவனங்கள். இந் நிறுவனங்கள் அனைத்திலிருந்தும் பெறப்படும் ஆண்டு வருமானம் சுமார் 22.88 கோடி ரூபாய்கள் (ரூபாய் இருபத்திரண்டு கோடியே எண்பத்தெட்டு லட்சங்கள் ஆகும்).

ரூபாய் பத்தாயிரத்திற்குக் குறைவான ஆண்டு வருமானம் உடையனவாய் விளங்கும் ஆலயங்களில் சில, ஒரு வேளை பூசை செய்வதற்குக்கூட வழியில்லாமல் இருக்கும் சிறுமை நிலையைப் போக்க அறநிலையத்துறைகொண்டு வந்து நிறைவேற்றி நடத்திக் கொண்டிருக்கும் ஒப்பற்ற திட்டமே ஆலய மேம்பாட்டுத் திட்டம் எனப்படும் எழுச்சிமிகு ரூபாய் ஏழு கோடித் திட்டமாகும்.

வருவாய் அற்ற ஆலயங்களின்வழிபாட்டிற்கென வைக்கப்பட்ட ஐந்து கோடி ரூபாய் வைப்பு நிதி, கிராமப்புறத் திருக்கோயில்கள், திருப்பணிக்கென வைக்கப்பட்ட ஒரு கோடி ரூபாய் வைப்பு நிதி, ஆலயப் பணியாளர் மருத்துவம் மற்றும் அவர்தம் பிள்ளைகள் கல்வி நிதிக்காக அமைக்கப்பட்ட ஒரு கோடி ரூபாய் வைப்பு நிதி ஆகிய இம்மூன்று திட்டங்களுமே, ஒரு சேர ஆலய மேம்பாட்டுத்திட்டம் அல்லது ஏழு கோடி ரூபாய் வைப்பு நிதித் திட்டமென அழைக்கப்படுகிறது. ஆன்மீகத் தலைவர்கள், ஆன்றோர்களால் பெரிதும் வரவேற்றுப் பாராட்டப்பட்ட இத்திட்டம் 15-8-1984 ஆம் நாளன்று மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் அவர்களால்திருச்சி சமயபுரத்தில் தொடங்கி வைக்கப்பெற்றது. ஆலயங்களில் விளக்கேற்றி வைக்க, நாட்டிற்கு சுதந்திர விளக்கு ஏற்றப்பட்ட நல்ல நாளைத் தேர்ந்தெடுத்தது மிகப் பொருத்தம்தானே !

ஆலயங்களின் உபரித் தொகை ரூ. 4½ கோடியிலிருந்து கடந்த ஏழெட்டு ஆண்டுகளில் 35 கோடிகளாக உயர்த்தப்பட்டுள்ளது. அவ்வாறு உயர்த்தப்பட்ட 35 கோடி ரூபாய்களில் ஏழு கோடி ரூபாய்கள் முப்பெரும் திட்டங்களுக்காக வங்கிகளில் வைப்புத் தொகையாக வைக்கப் பெற்றுள்ளன. அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி ஆலயம் மட்டும் இம் மூன்று திட்டங்களுக்காக இரண்டரைக் கோடி ரூபாயை வைப்பு நிதியாக வழங்கியுள்ளது. எஞ்சிய நாலரைக் கோடி ரூபாய்களை, இலட்ச ரூபாய்களுக்கு மேலே ஆண்டு வருமானம் பெற்று விளங்கும் இதர 69 ஆலயங்கள் வழங்கியுள்ளன.

வங்கிகளில் வைப்பு நிதியாக வைக்கப்பட்டுள்ள இந்த ஏழு கோடி ரூபாய் கரையாது கட்டாகப் பேணப்படுகிறது. அத்தொகையிலிருந்து வட்டியாக ஆண்டொன்றுக்குப் பெறப்படும் சுமார் எழுபத்தைந்து லட்ச ரூபாய் மட்டுமே ஆலய மேம்பாட்டுத் திட்டங்களுக்குப் பயன்படுத்தப்படும்.

## 36 உதவி ஆணையர்கள்

அறநிலையத்துறையில் தற்பொழுது மொத்தம் 36 உதவி ஆணையர்கள் இருக்கின்றனர். இவர்களில் 17 உதவி ஆணையர்கள் மாவட்ட அளவில் நிர்வாகத்தைக் கவனித்து வருகின்றனர். 11 உதவி ஆணையர்கள் திருக்கோயில்களில் செயல் அலுவலர்களாகப் பணியாற்றி வருகின்றனர். 8 உதவி ஆணையர்கள் நகை சரிபார்க்கும் அதிகாரிகளாகப் பணியாற்றி வருகின்றனர்.

இப்புதுமையான திட்டம் அறிவிக்கப்பட்ட ஓராண்டிற்குள்ளாகவே இத்திட்டங்களின் செயல்முறைத் துவக்க விழாவும் 20.7.85 அன்று தஞ்சைப் பெருவுடையார் ஆலயத்தில் மிகச் சிறப்பாக நடந்தேறியது குறிப்பிடத்தக்கது. கிராமப்புறக் கோயில் திருப்பணிக்காகப் பழநி அருள்மிகு தண்டாயுதபாணி சாமி திருக்கோயிலின் நிதியினின்றும் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள ரூபாய் ஒரு கோடியினின்றும் கிடைத்துள்ள வட்டி வருவாயினின்றும் அண்மையில் இரண்டாவது நிகழ்ச்சியாக 13.3.86-ஆம் நாளன்று சென்னை அருள்மிகு வடபழநியாண்டவர் திருக்கோயிலில் நடைபெற்ற விழாவில் தமிழகத்தில் உள்ள அனைத்து மாவட்டங்களிலிருந்தும் தேர்வு செய்யப்பட்ட 150 கிராமப்புறக் கோவில்களுக்கு ரூ. 10,000 வீதம் ரூ. 15 இலட்சம் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் அவர்களால் நிதி வழங்கப்பட்டது.

ஒரு வேளை பூசைக்குக்கூட வருமானம் இல்லாத 32 ஆலயங்களுக்குத் தலா ஐயாயிரம் ரூபாய் பூசை செலவிற்காக வழங்கப்பட்டுள்ளது. ஆலயப் பணியாளர்களுக்கு மருத்துவ நிதி தலா ரூபாய் 100 வீதம் பலருக்கும், கல்வி நிதி தலா ரூ. 100 பலருக்கும் வழங்கி இத்திட்டம் முதல் கட்டமாகச் செயல்படுத்தப்பட்டிருப்பது மட்டும் அல்லாமல் வரும் ஆண்டுகளில் மேலும் இத்திட்டங்களால் மிக அதிகமான ஆலயங்கள் பயன்பெற இருப்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாலய மேம்பாட்டுத்திட்டங்கள் தஞ்சையில் செயல்படுத்தப்பட்ட 20.7.85ஆம் நாளன்று இத்திட்டங்களில் குறிப்பிடப்படாத மற்றொரு திட்டமும் செயல்படுத்தப்பட்டது குறிப்பிடத்தக்கது.

ஆலயப் பணியாளர்களுக்குச் சம்பளம் கூடத் தர முடியாத நிலையில் தஞ்சையிலும், திருநெல்வேலியிலும் பல கோயில்கள் உள்ளன. இக்கோயில்களுக்கு நிலங்கள் ஏராளமாக இருந்த போதிலும், அவற்றைப் பயிர் செய்யும் குத்தகைதாரர்கள் பலர், விளைவில் 25 சதவீதம் என விதிக்கப்பட்டுள்ள குத்தகையை ஆலயங்களுக்குச் சரிவர செலுத்துவதில்லை. குத்தகையை முறையாகச் செலுத்தாத குத்தகைதாரர்களை எதிர்த்து வழக்கு மன்றத்திற்குப் போகவும் முடியாமல், அவர்களை வெளியேற்றவும் முடியாமல் மாரடோரியம் ( Moratorium ) என்ற பாதுகாப்புச் சட்டமும் அமுலில் இருந்தபடியால், 1392-ஆம் பசலி

முடிய வரவேண்டிய குத்தகைப் பாக்கி வேறு ரூ. 31.5 கோடியாக உயர்ந்து விட்டது.

இதனால், தஞ்சையிலும், திருநெல்வேலியிலும் ஆலயப் பணியாளர்கள் 930 பேருக்குச் சம்பள பாக்கி வழங்கப்படாமல் அவர்கள் பரிதவித்த நிலையையும் அறநிலையத்துறை பரிவுடன் பரிசீலித்து, 930 பேருக்கு வழங்கப்பட வேண்டிய சம்பள பாக்கி ரூ. 5,64,856—மற்றும் 41 காசுகளையும் இவ்வேழு கோடி ரூபாய்த் திட்டத்தின் துணைகொண்டு வழங்குவதென முடிவு செய்து, மாண்புமிகு அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள், ஆலயப் பணியாளர்களின் சம்பள பாக்கியையும் தஞ்சைப் பெருவுடையார் ஆலயத்தில் நடைபெற்ற ஆலய மேம்பாட்டுச் செயல்முறை தொடக்க விழாவில் தீர்த்து வைத்ததும் குறிப்பிடத்தக்க சாதனையாகும்.

குத்தகைதாரர்களுக்குப்பாதுகாப்புவழங்கி வந்த மாரடோரியம் என்ற பாதுகாப்புச் சட்டமும், 1985 ஜனவரி மாதத்தோடு காலாவதியாக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. பல ஆண்டுகளாகக் குத்தகைதாரர்கள்சேர்த்து வைத்துள்ள குத்தகை பாக்கிகளை 1987-ஆம் ஆண்டு மார்ச் மாதம் முடிவதற்குள் ஐந்து தவணைகளில் அவர்கள் கட்டியாக வேண்டும். குறிப்பிட்ட தவணைகளில் பாக்கியைச் செலுத்தவில்லையானால, உடனடியாக அத்தகையவர்கள் மேல் நடவடிக்கை எடுக்க அறநிலையத்துறை வழி வகை செய்து, நிலுவைகளை வேகமாக வசூலிக்க ஆவன செய்திருப்பது குறிப்பிடத்தக்கது. ஆலய நிர்வாக அதிகாரிகள், உதவி ஆணையர்கள், துணை ஆணையர்கள் ஒவ்வொருவருக்கும் நிலுவைகளை வசூலிக்க குறியீடு ( Target ) நிர்ணயம் செய்து, அறநிலையத் துறை வேகமாகச்செயல்பட்டு வருகிறது.

தமிழக அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை எண்ணற்ற சமுதாய நலப்பணிகளையும் மேற்கொண்டு செயல்படுத்தி வருவது இங்கே குறிப்பிடத்தக்கது. அறநிலையத்துறையின் கீழ் தற்போது கல்வி நிறுவனங்கள் 44, பெண்கள் தொழில் நுட்பப் பயிற்சிப் பள்ளி 1, அன்பு இலலங்கள் 35, மருத்துவ மனைகள் 20, நூலகங்கள் 101 ஆகியவை இயங்கி வருகின்றன. இவைகள் மட்டுமல்லாமல் சமுதாய வளர்ச்சிக்கு அறநிலையத்துறை மேலும் பல பணிகளை நிகழ்த்தி வருகின்றது. அவற்றில் ஒன்றுதான் சுதந்திரத் திருநாளில் ஆண்டுதோறும் நடத்தப்படும் சிறப்பு வழிபாடுமற்றும் பொது விருந்து நிகழ்ச்சிகள்.

''எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் இந்நாட்டு மக்கள்'' என்று பாடிய மகாகவி பாரதியார் 'சாதிகள் இல்லையடி பாப்பா' எனச் சாற்றினார். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் திருமூலரும் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்று அறிவுறுத்தியிருக்கிறார். உலகப் பொதுமறை தந்த திருவள்ளுவரும் 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும' என்று பாடியிருக்கிறார். இறைவன் ஆலயத்தில் அனைத்துத் தரப்பினரும் சரிநிகர் சமானமானவர்களே என்பதை வற்புறுத்தும் பொருட்டு 1981-ம் ஆண்டு முதல் ஆகஸ்ட் 15-ஆம் நாளில் சிறப்பு வழிபாடு மற்றும்பொது விருந்து நிகழ்ச்சிகள் அறநிலையததுறையால் சிறப்புற நடத்தப்பட்டு வருகின்றன.

பொது விருந்து திட்டம் தொடங்கப்பட்ட அதே 1981ஆம் ஆண்டு முதல், வசதி மிக்க ஆலயங்களில் அறநிலையத்துறையால்தொடங்கி நடத்தப்படுவதே சிறப்புத் திருமணங்கள்எனும் சீரிய திட்டமாகும். ஏழைகள் பலர் வயது வந்த தம் பிள்ளைகளுக்குத் திருமணம் செய்து பார்க்க முடியாமல் அதற்குக் குறைந்த பட்ச செலவாகத் தேவைப்படும் ஒரு ஆயிரம் ரூபாய் கூட இல்லாமல் வாடி நிற்கிறார்கள். எண்ணற்ற விதவைத் தாய்மார்கள், வயது முதிர்ந்து வறுமையில் வாடும் பெற்றோர்கள் படும் துன்பங்களைத் துடைக்க, அறநிலையத் துறை



கண்ட திட்டமே சிறப்புத் திருமணத் திட்டமாகும். மாண்புமிகு அமைச்சர்கள், ஆன்மீகத் தலைவர்கள், சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்கள், மடாதிபதிகள், பொது மக்கள் ஆகிய அனைவரும் ஒரு சேர வாழ்த்த இத்தகு திருமணங்கள் நடத்தப் பெறுவதால், இவற்றை இலவசத் திருமணங்கள் என்று கூறாமல், சிறப்பு திருமணங்கள் என்றே குறிப்பிட வேண்டும் என்பது அரசின் விருப்பமாகும். 1981 ஆம் ஆண்டில் 220, 1982-ல் 622, 1983-ல் 182, 1984-ல் 112, 1985-ல் 109 திருமணங்கள் ஆக இதுவரை மொத்தம் 1245 திருமணங்கள் நடத்தப்பட்டிருக்கின்றன. இதில் பயன் பெற்றவர்களில் 979 ஜோடி ஆதிதிராவிட மணமக்கள், 209 ஜோடி பிற்பட்ட மண மக்கள், 44 ஜோடி கலப்புத் திருமண மக்கள், 13 ஜோடி இதர வகுப்பைச் சேர்ந்த மணமக்கள் ஆவர். ஒரு திருமணத்திற்கு சுமார் ரூ. 750-லிருந்து ரூ. 1000-வரை அந்தந்தத் திருக்கோயில் உபரி நிதியிலிருந்து செலவிடப்படுகிறது. இதுவரை இத்திருமணங்களுக்காக ரூ. 9,61,200—வசதி மிக்க அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி ஆலயம், சமயபுரம் அருள்மிகு மாரியம்மன் ஆலயம், திருவேற்காடு அருள்மிகு கருமாரியம்மன் ஆலயம் போன்ற ஆலயங்களிலிருந்து செலவிடப்பட்டிருக்கின்றன.

இவ்வாறு வசதியற்றவர்களுக்குச் சிறப்புத் திருமணங்கள் நடத்தி வைக்கப்படுவதுடன் வசதி குறைந்தவர்கள் திருமணங்கள் நடத்திக் கொள்ள திருமண மண்டபங்கள் தேவைப்படுவதையும் அறநிலையத்துறை உணர்ந்து இதுவரை 109 திருமண மண்டபங்களைக் கட்டித் தந்திருப்பதுடன் தற்போது 32 திருமண மண்டபங்களையும் கட்டுவதற்கு அனுமதியும் வழங்கியுள்ளது. அறநிலையத் துறையின் திருமண மண்டபங்களே, நடுத்தர கடைத்தர மக்களுக்கு வரப்பிரசாதம்போல் குறைந்த வாடகையில் பயன்பட்டு வருகின்றன.

தல தரிசனம் காணவேண்டிப் புறப்பட்டு வரும் தமிழக மக்களுக்கும் இதர மாநில மக்களுக்கும் தங்குமிட வசதிகளைச் செய்து தருவதிலும் சிறப்பிடம் வகிக்கிறது, நம்முடைய அறநிலையத்துறை. திருக்கோயில்களில் இதுவரை 58 ஓய்வு விடுதிகளும் 231 குடில்களும், 951 அறைகளும் யாத்திரிகர்களின் வசதிகளுக்காக அமைக்கப்பட்டிருக்கின்றன. தனியார் தங்குமிடங்களில் வசதிகள் குறைவாக இருந்தபோதிலும் மிக அதிகமான கட்டணங்கள் வசூலிக்கப்படுகின்றன. அறநிலையத்துறை அமைத்துள்ள தங்குமிடங்களில் மிகக் குறைவான கட்டணங்களே வசூலிக்கப்படுகின்றன.

பழமையான கோயில்களைப் பழுதுபார்ப்பது, திருக்குளங்களைச் சீரமைப்பது, தேர்களைச் செப்பனிடுவது போன்ற பல கோயிற் திருப்பணிகளையும் அறநிலயத்துறை முனைப்போடு செயல்படுத்தி வருகின்றது. அரசாங்கமும் இப்பணிகளில் ஆர்வம் கொண்டு ஆண்டுதோறும் மானியம் வழங்கி வருகின்றது. 1981-82-ஆம் ஆண்டிற்கு ரூ. 12 இலட்சமும், 1982-83-ஆம் ஆண்டிற்கு 20 இலட்சமும் 1983-84-ஆம் ஆண்டிற்கு 23 இலட்சமும் 1984-85-ஆம் ஆண்டிற்கு ரூ 30 இலட்சமும் கோயில் திருப்பணிகளுக்காக அரசு மானியம் வழங்கப்பட்டிருக்கின்றன. இவ்வரசு மானியங்களோடு அறநிலையத்துறையும் ஆலய நிதிகளிலிருந்து பெருமளவில் நிதி ஒதுக்கித் திருப்பணிகளைச் செய்து வருகின்றன.

உலகிலேயே மிக உயர்ந்த கோபுரமாக 13 நிலைகளுடன் அமைக்கப்பட்டு வரும் திருவரங்கக் கோபுரத்தில் 13வது நிலை கோபுரக் கட்டுமானப் பணிக்கு ரூ. 7 இலட்சம் தமிழ்நாடு அரசால் அனுமதிக்கப்பட்டு திருப்பணி நடந்து வருகின்றது. அருள்மிகு காசி விஸ்வநாதசுவாமி ஆலய இராசகோபுரத் திருப்பணி 90 இலட்ச ரூபாய், அருள்மிகு சிதம்பரம் சபாநாயகர் திருக்கோயில் திருப்பணி 38 இலட்ச ரூபாய், அருள்மிகு மாங்காட்டு காமாட்சியம்மன் கோயில் திருப்பணி 8 இலட்ச ரூபாய், சேலம் கோட்டை மாரியம்மன் ஆலயத் திருப்பணி 17 இலட்ச ரூபாய், ஸ்ரீரங்கம் அரங்கநாத சுவாமி திருக்கோயில் திருப்பணி ஒரு கோடி ரூபாய், திருவாரூர் தியாகராஜசுவாமி திருக்கோயில் இராஜ கோபுரத் திருப்பணி ரூ. 11.57 இலட்சரூபாய் செலவில் மேற்கொள்ளப்பட்டு வேலைகள் நடைபெற்று வருகின்றன. சேலம் மாவட்டம் திருச்செங்கோட்டு மலை மீது அமைந்துள்ள அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் திருக்கோயிலுக்கு வாகனங்கள் மூலம் மலை மீதுபக்தர்கள் சென்று வழிபடுவதற்கு வசதியாக மலைப்பாதை ரூ. 60 இலட்சம் மதிப்பீட்டில் அமைக்க மதிப்பீடு அங்கீகரிக்கப்பட்டு, தமிழ்நாடு கட்டுமானக் கழகம் மேற்படி மலைப்பாதை அமைக்கும் வேலையைத் துரிதமாகச் செய்து வருகிறது (அரசு மான்யமாக ரூ. 5 இலட்சம் வழங்கப்பட்டு இருக்கிறது).

இதுபோன்ற பல திருப்பணிகளும் அறநிலையத்துறையின் சார்பாக நடைபெற்று வருகின்ற எண்ணற்ற திருப்பணிகளில் குறிப்பிடத்தக்க சிலவாகும்.

திருக்கோயில்களில் உள்ள பஞ்சலோக விக்கிரகங்கள் விலை மதிப்பற்றவை. அவற்

## திருக்கோயில் இதழுக்கு ஆண்டு இருபத்தெட்டு

நம்முடைய திருக்கோயில் இதழ் 1958ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் தொடங்கப்பெற்றது. வரும் அக்டோபரோடு, திருக்கோயில் இதழுக்கு 28 ஆண்டுகள் நிறைவுபெறுகிறது.

ஓய்வுபெற்ற தாசில்தாரரான திரு ஜி. கல்யாணம், திருக்கோயில் இதழுக்கு முதல் ஆசிரியர் ஆவார். இவர் 1962ஆம் ஆண்டு ஆகஸ்ட் முடிய பணியாற்றி உள்ளார். அமரர் சித்தாந்தப் புலவர்மணி ந.ரா. முருகவேள் அவர்கள் 1962 செப்டம்பர் முதல் 1985 ஆண்டு ஏப்ரல் 7ஆம் நாள் முடிய சுமார் இருபத்திரண்டரை ஆண்டுக்காலம் பணியாற்றியுள்ளார். தற்போது உள்ள ஆசிரியர் 25.6.85 முதல் இப்பணியை ஏற்று, ஆற்றிவருகிறார்.

றைப் பாதுகாக்க தக்க பாதுகாப்புப் பணிகளையும் அறநிலையத்துறை சிறப்பாகச் செய்து வருகின்றது. தஞ்சை மாவட்டத்தில் மட்டும் 2000 உலோகத் திருமேனிகள் உள்ளன. இவற்றைப் பாதுகாக்க அருள்மிகு திருவாரூர் தியாகராஜசுவாமி ஆலயத்தில் ரூபாய் 12,90,000— மதிப்பீட்டில் ஒரு சிலை காப்புக் கூடம் அமைக்கும் பணியை அறநிலையத்துறை மேற்கொண்டு பணி முடியும் தருவாயில் உள்ளது. வங்கிகளிலுள்ளது போன்ற பாதுகாப்பான கதவுகள் அங்கே பொருத்தப்பட்டுள்ளன. எளிதில் உடைக்க முடியாத கான்கிரீட்டு அறைகளும், உறுதியான தளமும் உள்ள பலமான கட்டடம் கட்டப்பட்டு வருகிறது.

திருநெல்வேலி மற்றும் திருவானைக்கா ஆகிய இரு இடங்களிலும் இதே போன்று பாதுகாப்பான சிலை பாதுகாப்புக்கூடம் ஏற்படுத்த மதிப்பீடு அங்கீகரிக்கப்பட்டு அரசு மான்யம் வழங்கப்பட்டு வேலை துவங்கப்பட உள்ளது.

1981-ல் 88 கோயில்களிலும், 1982-ல் 69 கோயில்களிலும், 1983-ல் 114 கோயில்களிலும், 1984-ல் 84 கோயில்களிலும் 1985-ல் 117 கோயில்களிலும் பல கோடிக் கணக்கான ரூபாய்கள் செலவில் திருப்பணிகள் முடிந்து கும்பாபிஷேகங்கள் நடந்தேறியுள்ளன. கடந்த 9 ஆண்டுக் காலத்தில் மட்டும் ஒன்பது தங்கத் தேர்கள் அமைக்கப்பட்டுள்ளன. சங்கரன் கோயில் சங்கரநயினார் ஆலயத்தில் அறநிலையத்துறையின் பன்னிரண்டாவது தங்கத் தேர் 15-12-85-ல் வெள்ளோட்டம் விடப்பட்டுள்ளது.

திருநாவுக்கரசர் பெருமான் உழவாரத் திருப்பணி புரிந்து ஆலயத் தூய்மையைப் பராமரித்த அருங்குணச் செல்வர் ஆவார். அவர் தம் வழியில் ஆலயங்களில் தூய்மையைப் பராமரிக்க அண்மையில் அறநிலையத்துறை மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்தில் திருக்கோயில் தூய்மைப் பராமரிப்புப் பணியைத் தொடக்கி வைத்து, அத்தகைய பணியில் அனைத்து ஆலயங்களும் ஈடுபட ஆவன செய்து வருகிறது. கவிச் சக்ரவர்த்தி கம்பருக்கு அவர் பிறந்த தேரழுந்தூரில் கம்பர் கோட்டம் ரூ. 20 இலட்சம் செலவில் கட்டி அதனை 10-12-84ல் திறந்து வைத்திருக்கும் அறநிலையத்துறை, இளங்கோ அடிகளுக்கும் சேக்கிழாருக்கும், சிறந்த சமயச் சான்றோர்கள் பலருக்கும் கோட்டங்கள் அமைக்க முயன்று வருகின்றது.

இவ்வாறு அற நிலையத்துறை ஆற்றியிருக்கும் பணிகள் மிகப்பல. ஆற்ற வேண்டியபணிகளும் மிகப் பல. ஊக்கத்தோடும் உற்சாகத்தோடும் மகேசன் தொண்டே மக்கள் தொண்டாகவும், மக்கள் தொண்டே மகேசன் தொண்டாகவும் முனைந்து செயலாற்றி வரும் அற நிலையத்துறை வருங்காலத்திலும் பல சிறந்த செயல் திட்டங்களைத் தீட்டி, நிறைவேற்ற உள்ளது.



பழநி தண்டாயுதபாணி சுவாமி ஆலயத்தில் தேவஸ்தானப் பிரசாத விற்பனை அங்காடியை ஆலயத்தக்கார் திரு. க. பொன்னுசாமி அவர்கள் அண்மையில் திறந்து வைத்தபொழுது எடுக்கப்பட்டது இப்படம்.

# சக்தி படைத்த முத்தாம்பிகை

தென் ஆற்காடு மாவட்டத்தில் விழுப்புரத்திற்கு மேற்கே மூன்று மைல் தூரத்தில் இருப்பது, தேவாரம் பாடிய மூவராலும் பாடப் பெற்ற புனிதத்தலம் திருஆமாத்தூர். இங்கெழுந்தருளியிருக்கும் இறைவனார் திருநாமம் அபிராமேசுவரர். அன்னையின் திருநாமம் முத்தாம்பிகை.

முத்தாம்பிகை அன்னையின் சக்தியை விவரிக்கும் கீழ்க்கண்ட வரலாறு சுவையானது.

ஒரு சமயம் தும்பூர் என்னும் கிராமத்தில் சகோதரர் இருவருக்குள் சொத்து பற்றிய வழக்கு உண்டாயிற்று. மூத்தவன் முன்னோர் சொத்துக்களை எல்லாம் பொற் காசுகளாக மாற்றி, மூங்கில் குழாய் ஒன்றில் அடைத்து வைத்துக் கொண்டு விட்டான். தன் தம்பி அச்சொத்துக்களைப் பற்றிக் கேட்டபோது சொத்து ஏதும் இல்லை எனக் கூறிவிட்டான். தம்பியோ விடாமல் முத்தாம்பிகை எதிரில் சத்தியம் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தினான்.

இருவரும் திருவாமாத்தூர் முத்தாம்பிகையின் சந்நிதிக்கு எதிரில் நின்றனர். மூத்தவன் தன் கையில் இருந்த மூங்கில் குழலைத் தன் தம்பி கையில் கொடுத்துவிட்டு, முன்னோர் சொத்து ஏதும் தன்னிடம் இல்லையென சத்தியம் செய்தான். பிறகு மூங்கில் குழலை மீண்டும் பெற்றுக் கொண்டான். இருவரும் திரும்பி வரும் போது வழியில் தாங்கல் என்னும் கிராமத்துக்கு அருகில், மூத்தவன் தன் தம்பியை நோக்கி ''முத்தாம்பிகை எதிரில் சத்தியம் செய்ய வேண்டும் என்றாயே! முத்தாம்பிகை கொத்திவிட்டாளோ?'' என்றான். அக்கணமே அவன் நின்ற இடத்தில் பூமி வெடித்துக் கருநாகமொன்று சீறிஎழுந்து அவனைக் கொத்தியது. விஷம் தலைக்கேறி அவன் கீழே விழுந்தான். அவன் கையில் இருந்த மூங்கில் குழலும் கீழே விழுந்து, அருகிலிருந்த கல்லில் மோதிப் பிளந்தது. பொற்காசுகள் சிதறின. முத்தாம்பிகையின் சக்திக்கு வேறென்ன சான்றுவேண்டும்.

கருநாகத்தால் மூத்தவன் மாண்ட தாங்கல் கிராமத்தில் வயல்களுக்கிடையில் படம் எடுத்து நிற்கும் நாகத்தாள் ஆலயம் இன்றும் விளங்கி வருகிறது. நாகாத்தாளின் படமெடுத்த தலைப் பாகம் மாத்திரம் இங்கிருக்க, மற்றை உடல்பாகம் பூமிக்குள் புதைந்துள்ளது. வால்பாகம் திருவாமாத்தூர் முத்தாம்பிகை அம்மனின் மார்பில் விளங்குவதை இன்றும் நாம் கண்டு, அம்பிகையின் சக்தியை வியந்து போற்றலாம்.



# விநாயகனே வினை தீர்ப்பவனே

''நஜன்''

விநாயகர், கணபதி என்றழைக்கப்படும் தும்பிக்கையுடைய இந்தத் தெய்வத்தை வழி படுபவர்களுக்கு நல்ல மனம் உண்டாகும். நன்கு பேசும் திறமை ஏற்படும். நல்ல சிந்தனை உருவாகும். லட்சுமி கடாட்சம் ஏற்பட்டு ஐசுவரியம் உண்டாகும். அருள்பார்வை ஏற்படும். நோய் நொடி ஏற்படாது.

இந்த பிள்ளையாரைப் பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்குமே. முச்சந்தியில், குளக்கரையில், ஆற்றங்கரையில் கோயில்களில் அவரை நீங்கள் பார்க்காமல் இருக்க முடியாது. அவரது யானை முகமும் பெரிய வயிறும் பிள்ளையார் என்றதுமே உங்கள் மனக் கண்முன் வருமே.



பால கணபதி

யானை என்றாலே உங்களுக்கெல்லாம் பார்க்கப் பிரியம். அதைப் பார்க்க ஓடுவீர்கள். எங்கள் ஊர் திருவிழாவின் போது யானை வரும். பத்து நாள் இருக்கும். அதைப் பார்த்துக்கொண்டே இருப்போம். எத்தனை தரம் பார்த்தாலும் அலுக்காது. குழந்தைகள் யானையை விரும்புவது போல குழந்தைக் கடவுளாகவுமுள்ளவர் பிள்ளையார்.

அந்த கணபதிக்கு பிள்ளையார் என்று ஒரு பெயரும் உண்டு. இப்பெயரிலிருந்தே அவர் யாருக்கோ பிள்ளை என்று தெரிகிறதல்லவா ? யாருக்கு ? பார்வதிக்கும் பரமசிவனுக்கும்தான். உலக தாய் தந்தையான அந்தப் பெரியவர்களின் பிள்ளையாதலால் அவரை மரியாதையுடன் பிள்ளையார் என்கிறார்கள்.

நம்மிடையே ஒரு பெரிய மனிதரான செட்டியை செட்டியார் என்று அழைக்கிறோம். முதலி வகுப்பினரை முதலியார் என்கிறோம். அது போலவே அப்பிள்ளையுடன் ஆர் சேர்த்து பிள்ளையார் என்றழைக்கிறோம்.

விடுகதை ஒன்று சொல்வதுண்டு. ''இரண்டு கால் இருக்கும் ஒரு கண் இருக்கும். கொஞ்சம் பாக்கு தின்பாள் அது என்ன?'' என்பதுகேள்வி. பாக்குவெட்டிதான் இதற்கு விடை.

அதுபோல ஒரு பாட்டி ஒரு புதிர் போட்டாள்.

சங்கரிக்கு மூத்த பிள்ளை

சங்கரனார் பெற்ற பிள்ளை

இப்பிள்ளை யார் சொல்?

பேரப் பையன் பதில்: பிள்ளையார்.

இப்படி குழந்தை வயதிலேயே உங்களுக்கு தெரிந்த பிள்ளையார் பற்றி பள்ளியிலும் குறிப்பிட்டிருப்பார்கள்.

இந்த பிள்ளையாரைப் பற்றி மேலும் தெரிந்து கொள்வோம்.

## விழிப்புக் குழுக்கள்

கிராமப் புறங்களில் உள்ள திருக்கோயில்களி லிருந்து சிலைகள் திருட்டுப் போவதைத் தடுக்க, விழிப்புக் குழுக்கள் நியமிக்கப்பட்டு வருகின்றன. இந்த விழிப்புக் குழுக்களின் உறுப்பினர்கள் பின் வருமாறு :

1. கிராமத்தில் உள்ள நான்கு பெரியோர்கள்
2. நான்கு முன்னாள் இராணுவத்தினர்
3. அங்குள்ள காவல்துறை அதிகாரி
4. பிர்க்கா வருவாய்த்துறை ஆய்வர்.
5. அறநிலையத்துறைப் பிரிவு ஆய்வர்.

## ''ஓம்'' என்ற உருவில் தோற்றம்

கைலாசத்தில் இளவேனிற் காலத்தில் சிவ பெருமானும் உமாதேவியும் சிங்காரவனத்தில் இயற்கை அழகுகளைப் பார்த்து மகிழ்ந்து சிற்ப மண்டபத்தில் நுழைந்தார்கள். அங்குள்ள சித்திரங்களில் ஒன்று ''ஓம்'' என்ற பிரணவ வடிவத்தை யானை வடிவங்களில் விசித்திரமாக சித்தரித்துக் காட்டியது. சிவனும் உமையும் அச்சித்திரத்தை ஊன்றிக்கவனித்தனர். உடனே அப்பிரணவ சித்திரத்திலிருந்து ஒரு ஜோதி தோன்றியது. அதன் மத்தியில் கணபதி, ஜோதி மயமானக் குழந்தையாகத் தோன்றினார்.

விநாயகர் பிறப்பைக் குறித்து மேலும் பல வரலாறுகள் வழங்கி வருகின்றன.

சனி பகவானின் பார்வையால் விநாயகரின் தலை நீறாகி விட்டதாகவும், வேறு யானை தலை பொருத்தப்பட்டது என்றும் கூறப்படுகிறது.

கணபதி பிறந்த செய்தியைக் கேட்டு எல்லாத் தேவர்களும் அவரைப் பார்க்கப்போனார்கள். சனீஸ்வரனும் போயிருந்தார். ஆனால் குழந்தையை பார்க்காமல் தலையைக் குனிந்து கொண்டிருந்தார். ''ஏன் இப்படித் தலை குனிந்துக் கொண்டிருக்கிறீர்?'' என்று பார்வதி கேட்டாள்.

''நான் பாக்கியமில்லாதவன். நான் பார்த்தால் குழந்தைக்குக் கேடு விளையலாம்'' என்றார் சனி.

''அப்படியும் ஒரு சாபமா? எப்படி ஏற்பட்டது.''என்று தேவி கேட்டாள்.

''என் மனைவி இட்ட சாபம் அது''என்றார் சனி.

''அந்த சாபம் எல்லாம் இங்கு எடுபடாது. நீங்கள் குழந்தையைப் பார்க்கலாம்'' என்று தேவி சொல்ல, சனியும் பார்க்க, குழந்தையின் தலை நீறாகி விட்டது. விஷ்ணு ஒரு யானையின் தலையை வைத்து பொருத்திவிட்டார்.



கஜமுகாசுர வதம்

பிறப்பு இல்லாத விநாயகருடைய பிறப்பைப் பற்றி இப்படிப் பல விதமாகக்கூறுகிறது புராணங்கள்.

## பால லீலைகள் :

கிருஷ்ண பரமாத்மா குழந்தைப் பருவத்தில் தன் லீலைகள் மூலமே விளையாட்டாகப் பல அசுரர்களைக் கொன்றிருக்கிறார் என்று படித்திருக்கிறோம். அம்மாதிரி கணபதி செய்த லீலைகள் பல.

இவர் குழந்தையாக இருக்கும்போது ஒரு அசுரன் இவரைத் தூக்கிக் கொண்டு வானத்தில் பாய்ந்தான். குழந்தை அவன் காதுகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. அசுரன் அலறினான். ஆனால் கணபதி பிடியை விடவில்லை. குழந்தையைக் கீழே வீச அவன் முயன்றான். ஆனால் கணபதி காதை விடாமல் அவன் மார்பில் ''விண் விண்'' என்று உதைக்க அசுரன் அந்த உதை தாங்காமல் உயிரை விட்டான். இவனே குரூரன் என்ற அசுரன்.

புராண உலகில் முதல் பெரும் போரான தேவாசுர யுத்தம் நடந்து கொண்டிருந்தது. மிக பலசாலியான சிந்து என்பவன் அசுரர்களுக்கு உதவியாக இருந்தான்.

இந்த சிந்து வரபலம் பெற்றவன். மூன்று உலகங்களையும் ஆண்டு வந்தான். இவன் ஆட்சியில் ஜபம், தவம், யாகம், தியாகம், எதுவும் கிடையாது.

இந்த சிந்துவை தனியாகப் போரிட்டுக் கொன்றவர் கணபதி, இதனைக் கண்டு பரம சிவனே ''வீரகோர சூர சம்ஹார சித்தி விநா யகர்'' என்று வாயார வாழ்த்தினாராம்.

இம்மாதிரி பல அசுரர்களை கணபதி தீர்த்துக் கட்டியிருக்கிறார்.

அரனவன் இடத்தில் ஐங்கரன் வந்து தான்
''ஐயா, என் செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினான்'' என்றே சிணுங்கவும்
அத்தன் வேலவனை நோக்கி
விரைவுடன்வினவவே அண்ணன் என்சென்னயில்
விளங்கு கண் எண்ணினன் என
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்து நீஅப்படியும்
விகடம் ஏன் செய்தாய் என
மருவும் என் கைந்நீளம் முழம் அளந்தான் என்ன
மயிலவன் நகைத்து நிற்க
மலையரையன் உதவவரும் உமையவளை நோக்கி நின்
மைந்தரைப் பாராய் எனக்
கருது அரிய கடல்ஆடை உலகு பல அண்டம்
கர்ப்பமாய் பெற்ற கன்னி
கணபதியை அருகு அழைத்து அகமகிழ்வு கொண்டனள்
களியுடன் உமைக் காக்கவே.

கணபதியும் முருகனும் குழந்தைப் பருவத் தில் ஒருவரோடொருவர் சண்டை போட்டுக் கொண்டும் இருக்கின்றனர்.

ஒரு சமயம் கணபதி அழுது கொண்டே வந்தார். தம்பி தன் காதைக் கிள்ளி விட்டான் என்பது புகார்.

முருகனைக் கூப்பிட்டனுப்பி ''அண்ணன் காதைக் கிள்ளலாமா?'' என்று கேட்டாள் அம் பிகை.

''அவன் மட்டும் என் கண்களை எண்ண லாமா'' என்றான் முருகன்.

''என்ன கணபதி அப்படி எண்ணலாமா? என்று கேட்டார் தந்தை.

''அவன் மட்டும் என் துதிக்கையை முழம் போடலாமா? என்றார் கணபதி.

அன்னையும் அப்பனும் பூரித்துப் போயி னர்.

சிவப்பிரகாச சுவாமிகள் இக்காட்சியை மிக அழகாக மேற்கண்டவாறு பாடியிருக்கிறார்.

## யானை முகம் ஏன்?

பிள்ளையாருக்கு யானை முகம் இருக்கி றது. உடல் மனிதர் போல இருக்கிறது. கால் கள் குச்சிபோல் இருக்கிறது. இது ஏன்?

## சிலைகாப்புக் கூடங்கள்

தமிழகத் திருக்கோயில்களில் உள்ள விலை மதிப்புயர்ந்த திருவுருவச் சிலைகளைப் பாதுகாப்ப தற்கு சிலைகாப்புக் கூடங்கள் கீழ்க்கண்ட மூன்று இடங்களில் அமைக்கப்பட்டு வருகின்றன.

1. அருள்மிகு தியாகராஜசுவாமி திருக்கோயில், திருவாரூர்.
2. அருள்மிகு நெல்லையப்பர் காந்திமதி அம் பாள் திருக்கோயில், திருநெல்வேலி
3. அருள்மிகு ஜம்புகேஸ்வரர் திருக்கோயில், திருவானைக்காவல்.

இந்தச் சிலை காப்புக் கூடங்கள் மிகவும் பாது காப்பானவை. திருடர்கள் உள்ளே நுழைந்து சிலை கள் இருக்கின்ற அறைக்குள் நுழைவார்கள் ஆனால் அலறும் அபாயமணி, அவர்களைப் பிடித்துக் கொடுத்துவிடும்.

கடவுளுக்கு எவ்விதமான உருவமும் கிடையாது. ஆனால் எல்லா ரூபங்களாகவும் விளங்குகிறார். உலக உருவினங்கள் எல்லாவற் றையும் ஏழு வகையாக இறைவன் பிரித்திருக் கிறார். இவற்றில் மனித உருவம் ஆறாவது. தேவ உருவம் ஏழாவது. இந்த எல்லா உருவ மாகவும் அவர் விளங்குகிறார்.

கடவுள் கருணை மிக்கவர். இவர் இந்த யானை முகத்துடன் விளங்கக் காரணம் கஜ முகாசுரன் என்பவனே.

## கஜமுகன் சம்ஹாரம்

விநாயகர் சம்ஹரித்த அசுரர்களில் கஜ முகன் என்பவன் மிக முக்கியமானவன். இவன் அசுரப்பெண் ஒருவனுக்கும் ஒரு முனிவருக்கும் பிறந்தவன். இவன் சிவபெருமானைக்குறித்துத் தவம் இருந்து ஆயுள்பலமும் வரபலமும் பெற்றவன். அந்த சக்தியை அசுர சத்தியாக்கி ஹிம்சை நெறியில் உபயோகித்து விண்ணுலகை யும் மண்ணுலகையும் அடிமைப்படுத்த முயன் றான்.

இவன், மிருகத்தினால் மரணம் கூடாது. மனிதனால் சாவு கூடாது. பூதகணங்களால் கூடாது. ஆயுதங்களினால் கூடாது என்றெல் லாம் வரம் பெற்றான். தேவர்கள் கஜமுகனின் கொடுமை தாங்காமல் கணபதியிடம் முறை யிடவே அவர் தேவர்களுக்கு உதவ முன்வந்தார்.

கணபதியை யானை முகத்தைக்கொண்டு மிருகம் என்று சொல்ல முடியாது. மனித உட லைக் கொண்டு மனிதன் என்று சொல்ல முடி யாது. கால்களைக் கொண்டு கணம் என்று சொல்ல முடியாது. அவன் வரத்திற்கு ஏற்ப விநாயகர் அவனை சம்ஹரிக்க உடலமைப்பும் அமைந்தது. ஆயுதங்களால் மரணமில்லை. ஆகவே, தன் கொம்புகளிலே ஒன்றை ஒடித்தே அதையே ஆயுதமாக்கி அவனை சம்ஹரித்தார்.

## 18 துணை ஆணையர்கள்

அறநிலையத்துறையில் தற்பொழுது மொத்தம் 18 துணை ஆணையர்கள் உள்ளனர். இவர்களில் 7 துணை ஆணையர்கள் மண்டல அளவில் நிர்வாகத்தைக் கவனித்து வருகின்றனர். 7 துணை ஆணையர்கள் திருக்கோயில்களில் செயல் அலுவலர்களாகச் செயல்பட்டு வருகின்றனர். மேலும் ஒரு துணை ஆணையர் திருமடங்களின் நிர்வாகத்தைக் கண்காணித்து ஆய்வு செய்யும் பணியிலும், மேலும் ஒரு துணை ஆணையர் துறை சம்பந்தமான வழக்குகளை விசாரித்து முடிவு செய்யும் பணியிலும் ஈடுபட்டு வருகின்றனர். இருதுணை ஆணையர்கள் ஆணையரின் நேர்முக உதவியாளராக உள்ளனர்.

---

இக்கஜமுகன் செய்த கொடுமைகளில் ஒன்று தேவர்களை அடிமையாக நடத்தியது.

இந்திரன் முதலியதேவர்கள்காலை, உச்சி, மாலை என்ற மூன்று நேரங்களிலும் தன் முன் காதுகளைப் பிடித்துக்கொண்டு 1008 முறை தோப்புக்கரணம் போடவேண்டும் என்று நிர்ப்பந்தப்படுத்தினான். இந்தத் தொல்லையிலிருந்து விடுபட தேவர்கள், விநாயகரை தோத்திரம் செய்தார்கள். என்ன வரம்வேண்டுமென்று கணபதி கேட்டபோது, ''இது வரை அசுரன் முன்போட்ட தோப்புக்கரணத்தை உங்கள் முன் போடுகிறோம்'' என்றார்கள்.

கணபதி தாராளமாகப் போடுங்கள். ஆனால் மூன்று முறை போட்டால் போதும் என்று அருள் புரிந்தார்.

விநாயகர் முன்தோப்புக்கரணம்போடுவதால் அறிவு வளர்ச்சியும் உடல் நலமும்உண்டாகி அவருடைய திருவருளுக்கும் உரியவர்களாகலாம்.

### மாம்பழச் சண்டை

தன் இரண்டு பிள்ளைகளில் யார் கெட்டிக்காரர் என்ற வாக்கு வாதம் சிவனுக்கும் பார்வதிக்குமிடையே ஏற்பட்டது. ஒரு போட்டி வைப்பது என்றும் வெற்றி பெறுபவர்களுக்கு ஒரு மாம்பழம் பரிசு அளிப்பது என்றும் அத்தெய்வ தம்பதிகள் தீர்மானித்தனர்.

மாம்பழத்தை தந்தை கையில் கண்டவுடனே முருகனும் கணபதியும் அதை தனக்கேதான் தரவேண்டும் என்று போட்டியிட்டனர்.

உலகங்களை எல்லாம் யார் முதலில் சுற்றி வருகிறார்களோ அவர்களுக்கே இந்த மாம்பழம் என்றார் சிவபெருமான்.

தன்னிடம் தான், மயில் வாகனம் இருக்கிறதே. படுவேகமாகப் போய் உலகப் பிரதட்சிணத்தை சீக்கிரமே முடித்து விடலாம் என்ற நம்பிக்கையில் மயில் மீது ஏறிப்போய் விட்டார் முருகன்.



ஔவையாரைக் கயிலாயத்திற்கு அனுப்புகிறார்.

எவ்வளவோ வேகமாகத்தான் சுற்றி வந்தார். ஆனால் அவர் வந்தபோது கணபதி மாம்பழத்தை வாங்கிக் கொண்டிருந்தார்.

முருகனைப் போல் கணபதி உலகங்களை எல்லாம் சுற்றிவரவில்லை. அன்னையையும் பிதாவையும் வலம் வந்தார். பழம் கொடுங்கள் என்றார். சிவபெருமான் கொடுத்துவிட்டார்.

அம்பிகை, மகனின் சாமர்த்தியத்தைக் கண்டு புன்னகை செய்தாள். இந்த சிவ சக்திகள் இல்லாத உலகமா வெளியில் இருக்கிறது?

எங்கும் அணுவுக்குள் அணுவாக இருக்கும் இறைவனை வலம் வந்தாலே உலகங்கள் அனைத்தையும்வலம் வந்ததாகத் தானே அர்த்தம்.

இதைக் கவி சுப்ரதீபர்

அக்கனி தரச் சொல்லி
அப்பனே வலத்தில் வரும்
கைக் கஜமுகக் கடவுள்

என்று பாடியிருக்கிறார். எனக்கே வெற்றி நிச்சயம். கொடுங்கள் அக்கனியை, என்று சொல்லிக்கொண்டே வலம் வந்தாராம் விநாயகர். அவ்வளவு தன்னம்பிக்கை.

முருகனுக்கு அக்கனி கிடைத்திருந்தால் நமக்குத் தண்டபாணி கிடைத்திருக்க மாட்டார். முருகன் கோபித்துக் கொண்டு கோவணாண்டியாகப் புறப்பட்டு விட்டார். பழம் உனக்கு எதற்கு? நீயே பழமாயிற்றே, பழம் நீ (பழநி) என்று அம்பிகை எவ்வளவு சொல்லிப் பார்த்தும், முருகன் கேட்கவில்லை. மலையின் மீது ஆண்டியாக அன்பர்களுக்கு அருள் வழங்கி நிற்கிறான்.

## அச்சு முறிந்தது ஏன்?

தந்தையாகிய சிவபெருமான் தன் மகன் முருகனிடமே உபதேசம் பெற்றவர். அதே போல விக்கினங்களை போக்கிக் கொள்ள கணபதியை அவர் பூஜை செய்திருக்கிறார்.

விநாயக பூஜை செய்யாமல் சிவபெருமான் திரிபுர தகனத்திற்குப் புறப்பட்டார். விநாயகரை நினைக்கக் கூட நேரமில்லை. உலக சேமத்தை நினைத்துக் கொண்டு மிக அவசரமாகப் புறப்பட்டார். விநாயகருக்கு கோபம் வந்து விட்டது. தேரின் அச்சை முறித்து விட்டாராம். அச்சு என்பது தேரின் சக்கரங்களைப் பிணைக்கும் கட்டை. தேரின் சக்கரம் வெளி வந்து விடாமல் தடுக்கும் ஒரு ஆணிபோன்ற இரும்பு அச்சாணி. உருவம் சிறிதேயானாலும் இந்த அச்சாணி இல்லை என்றால் அந்த மாபெரும் தேர் ஓடாது.

சிவபெருமான் விநாயகரை வழிபடவே அந்த விக்னம் நிவர்த்தியாயிற்று.

இதைத்தான் அருணகிரி நாதர்

'' முப்புரம் எரிசெய்த
அச்சிவன் உறை ரதம்
அச்சது பொடி செய்த அதிதீரா ''

என்று பாடுகிறார்.

**முருகபெருமான் கனிக்காக உலகை வலம் வருதல்**



சிவபெருமானின் தேர்அச்சு இற்றுப் போன இடம் தான் இன்றும் அச்சிறுப்பாக்கம் என்று சொல்லப்படுகிறது.

## வள்ளி கல்யாணத்திற்கு உதவியவர் :

தேவேந்திரன் மகள் தேவசேனாவை மனைவியாகப் பெற்ற பின்பும் பூலோகத்தில் ஒரு குறப் பெண்ணிடம் முருகனுக்கு காதல். அந்த குறப்பெண் வள்ளி அவர்கள் குல வழக்கப்படி தினைப்புனம் காத்து வந்தாள்.

எப்போதுமே பருவ மங்கைகள் இருக்கும் இடத்திற்கு குழந்தைகள் போகலாம். கிழவன் போகலாம். இது தெரிந்த முருகன் கிழவர் ரூபத்தில் வள்ளியிடம் சென்று பேச்சு கொடுத்தார். ஆனால் அவர் காரியம் வெற்றி பெறவில்லை.

வள்ளியிடம் பேச்சுக் கொடுத்து அவளுக்கு யானையிடம் மிகப் பயம் என்பதைத் தெரிந்து கொண்டார். தன் தமையனை நினைத்தார். அவர் யானை முகக் கடவுளாகத் தோன்றவில்லை. யானையாகவே வந்து விட்டார். உயிரைக் காப்பாற்றிக் கொள்ள பயம் காரணமாக ஓடிவந்து வள்ளி, கிழவரைக் கட்டிக் கொண்டாள். தன்னைநாடி வந்த கிழவர், தான் கணவனாக அடைய விரும்பும் முருகனே என்பது வள்ளிக்குத் தெரிய வந்தது. இந்த விதமாக விக்னத்தை உண்டாக்கியும் போக்கியும் திருமணத்தை நடத்தி வைத்தார் கணபதி.

## குட்டுப்பட்ட பிள்ளையார்

அயோத்தியில் ராமர் பட்டாபிஷேகம் ஆனபின் விபீஷணனுக்கு ராமர் விடை கொடுத்து அனுப்பும் போது இட்சுவாகு வம்சத்தின் குலச்செல்வமான ஸ்ரீரங்கநாதர் விக்ரகத்தைக் கொடுத்து வழிபட்டுக் கொண்டு வரும்படி அனுக்கிரஹித்தார்.

இத்தெய்வத் திருஉருவைப் பெற்றுக் கொண்டு விபீஷணன் இலங்கை நோக்கிப்பயணமானான். தமிழ்நாட்டின் வழியே அவன் போய் கொண்டிருக்கும் போது இந்த அருமையான செல்வத்தை தமிழ்நாட்டிலேயே நிலை நிறுத்த வேண்டும் என்று கணபதி திருவுளம் கொண்டார். காவேரிக் கரையில் விபீஷணன் வந்தபோது ஒரு சிறுவனாக அவன் முன் தோன்றினார் பிள்ளையார்.

விக்கிரகத்தை யாரிடமாவது ஒப்படைத்து விட்டு ஸ்நான பானாதிகளை முடிக்க விரும்பிய விபீஷணனுக்கு சிறுவனைக் கண்டதும் மகிழ்ச்சியுண்டாயிற்று. ''தம்பி! இந்த விக்கிரகத்தைக் கீழே வைக்காமல் கையிலேயே வைத்திருக்க வேண்டும், நான் சீக்கிரமே வந்து விடுகிறேன்'' என்றான்.

(தொடரும்)

அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,
சென்னிமலை, பெரியார் மாவட்டம்.
திருப்பணி [illegible] விழா.
நாள்: 1-6-[illegible] நேரம்: காலை 9 மணி.
திரு கே. சி. பழனிசாமி, பி.ஈ., (அக்ரி) எம். எல். ஏ., அவர்கள் தலைமையில்,
போக்குவரத்துத்துறை அமைச்சர்
மாண்புமிகு சு. முத்துசாமி, எம். ஏ., அவர்கள்
முன்னிலையில்
செய்தி, அறநிலையத்துறை அமைச்சர்
மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள்
அடிக்கல் நாட்டினார்கள்
திரு க. சுந்தரமூர்த்தி, இ.ஆ.ப. ஆணையாளர்
திரு ஆ. மலையாண்டி, பி.ஏ., பி.எல்., துணை ஆணையாளர்
பிரம்மமுத்து, பி.ஏ., செயல் அலுவலர்
ஒ. எஸ். ரங்கசாமி கவுண்டர் தலைவர்
மற்றும்
திருப்பணிக்குழுவினர்

பதிவு எண். எம் 7039



பெரியார் மாவட்டம், சென்னிமலை அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் திருப்பணி கால்கோள் விழாவில் மாண்புமிகு அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு ஆர். எம். வீ. அவர்கள் அடிக்கல் நாட்டிச் சிறப்புரை ஆற்றுகிறார்கள். மாண்புமிகு போக்குவரத்துத்துறை அமைச்சர் திருமிகு சு. முத்துசாமி அவர்கள் விழாவிற்குத் தலைமை வகிக்கிறார்கள்.



வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-600034.
ஆசிரியர் : கவிஞர் டாக்டர் த. அமிர்தலிங்கம், M.A., Ph.D.
அச்சிட்டோர் : தமிழரசு அச்சகம், அரசினர் தோட்டம், சென்னை-600 002.